ANNAMALAI UNIVERSITY ISAI TAMIL SERIES
VOL XII PART I.

# மிருதங்க : : : : பாடமுறை

(இரண்டாம் பதிப்பு.)

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

1955

ANNAMALAI UNIVERSITY ISAI TAMIL SERIES
VOL XII PART I.

# மிருதங்க பாடமுறை

பன்னிரண்டாம் தொகுதி

(இரண்டாம் பதிப்பு.)

WITH COURAGE AND FAITH

அண்ணாமலை பல்கலைக்கழகம்.

1955

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து இசைத்தமிழ் வெளியீடு—12 பகுதி I

# மிருதங்க பாடமுறை

ஆக்கியோன்
மைலாட்டூர் V. சாமி ஐயரவர்கள்
முன்னாள் மிருதங்க ஆசிரியர்
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

பரிசோதித்துத் தொகுத்து உதவியவர்
திரு. வி. எஸ். கோமதிசங்கர ஐயர் அவர்கள்
வீணை விரிவுரையாளர்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

இஃது
அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரால்

சிதம்பரம் பாண்டியன் அச்சகத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

1955



[விலை ரூபாய்

# உள்ளுறை

மகாமகோபாத்தியாய பண்டிதமணி

## திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள்

இயற்றியவை

# கடவுள் வாழ்த்து

---

### ஆசிரிய விருத்தம்

பூவார் மணம்போல் உலகமெலாம்
பொருந்தி யியக்கும் பெரும்பொருளே
புனிதம் நிறைந்த வுணர்வுடையோர்
புகழிற் கிடக்கும் புண்ணியனே

நாவார் கலைகள் துணிபொருளா
நவில்நா யகனே மெய்யுணர்வின்
நலமார் வடிவே யகவிருளை
நலிந்து விளங்கி நல்லன்பர்

தூவார் உளத்திற் சுடர்விளக்கே
துகளற் றொடுங்கித் தமைமறந்து
துய்ப்பார்க் கினிய செழுந்தேனே
தோன்றாத் துணையே அறுவரெனும்

மேவார் தமைச்செற் றுளந்தெளிந்தோர்
வினைமா சறுக்கும் மெய்ப்பொருளே
விரும்பிப் பணியும் எம்மையருள்
வெள்ளத் திளைத்துக் காத்தருளே.

# அண்ணாமலைப் பல்கலைக் கழக வாழ்த்து

### கட்டளைக் கலித்துறை

கண்ணார் மணியிற் புரப்போ ரெனும்பொருட் கார்பொழிந்த
தண்ணார் நிதிநீர்ச் செழிப்பிற் கலைப்பயிர் தான்வளர்க்கும்
அண்ணா மலைப்பல் கலைக்கழ கப்பே ரணிநிலையம்
விண்ணார் புகழொடு நாளுநா ளோங்கி விளங்குகவே.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நிறுவிய
செட்டி நாட்டரசர்
உயர்திரு. டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார்



ஊக்கம் உறுதி உணர்ச்சி யருஞ்செயலின்
ஆக்கம் அறம்புகழன் பாண்மைமுதல்—நீக்கமறக்
காண்டற் கமைந்த கவினுரு அண்ணாமலைமன்
ஆண்டகையின் நல்லுருவ மாம்.

—மகாமகோபாத்தியாய—பண்டிதமணி
மு. கதிரேசச் செட்டியார்.

மகாமகோபாத்தியாய – பண்டிதமணி

### திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் கூறிய

## வாழ்த்து

---

சீர்மலி கொடையால் அறிவினால் ஆற்றுஞ்
செயற்கருஞ் செயலினால் உலகிற்

பேர்மலி புகழாற் பல்கலைக் கழகம்
நிறுவிய பெருமையாற் சிறந்தோன்

ஏர்மலி தருநல் இசைத்தமிழ் வளர்க்கும்
ஏந்தல்நம் செட்டிநாட் டரசாம்

நார்மலி யுளத்தண் ணாமலை வள்ளல்
நலமுற நீடுவா ழியவே.



இசைக்கல்லூரி
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் ஆராய்ச்சிப் பகுதியின் முன்னாள் தலைவர்

மகாமகோபாத்தியாய பண்டிதமணி

## திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்

எழுதிய

# முகவுரை

அறத்தின் வீரமும், அருஞ்செயல் வீரமும், அருளின் திறத்து வீரமும் செறிந்த செட்டிநாட்டரசர் அவர்களின் ஆதரவில் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தினின்றும் வெளியிடப்பட்டுவரும் இசைத் தமிழ் வெளியீடுகளுள் 'மிருதங்க பாடமுறை' என்னும் இப் புத்தகம் பன்னிரண்டாந் தொகுதியின் முதற் பகுதியாகும். இதன் கண் மிருதங்கம் பயிலும் கல்லூரி மாணவர்களுக்கும், அத் துறையில் பழக விரும்பும் பிறர்க்கும் பயன்படும்படி தொடக்க முதல் முடிவுவரை அறிந்து கொள்ளுதற்கு ஏற்பத் தாளவகைகளின் அலங்காரச் சொற்கட்டுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. துருவம் முதலிய எழுவகைத் தாளங்களுக்கும் அவற்றின் விரியாகிய முப்பத்தைந்து தாளங்களுக்கும் உரிய வாய்பாடுகளை இதன்கண் விளக்கமாகக் காணலாம். மிருதங்கம் பயிலும் மாணவர்களின் வகுப்பு முறைக்கேற்ப முதலாம் ஆண்டு, இரண்டாம் ஆண்டு, மூன்றும் ஆண்டு, நான்காம் ஆண்டு எனப் பிரிவு செய்து பாடமுறைகளை அமைத்திருப்பதும், அவற்றின் இறுதிகளில் இலக்கண முறையை விளக்கியிருப்பதும் பாராட்டத்தக்கன. நாட்டியக் கலைக்குச் சிறப்பாகக் கருதப் படும் தீர்மான சதிகளும், சித்திர நாட்டிய சிம்மநந்தன சதிகளும் விநாயக கௌத்துவம் முதலியவைகளும் மாணவர்களுக்குப் பயன்படும் அளவிலன்றி மிருதங்க வித்துவான்களும் அறிந்து இன்புறும் முறையில் விளக்கப்பட்டுள்ளன. சுரங்களைப் பற்றி நிகழும் அலங்காரங்களுக்கேற்ப அமைக்கப்படும் வாய்பாடுகளே சொற்கட்டுகளாகும். அச் சொற்கட்டு வாய்பாடுகளின் முறைப்படி விநாயகர் முதலிய தெய்வங்களைப் பற்றி யெழுந்த சாகித்தியங்களே விநாயக கௌத்துவம் முதலியனவாகும். இப்பொழுது மிருதங்க வித்துவான்களால் பெரும்பாலும் மேற்கொள்ளப்படுவன ஆதி, ரூபகம், சாய்ப்பு, சம்பை என்னும் நான்கு வகைத் தாளங்களாகும். ஆயினும், நாட்டியக்கலை முதலியவற்றிலும் அரிய சில இசைப்பகுதிகளினும் ஒரோவழிப் பயன்படும் ஏனைய தாளமுறைகளும் அவற்றின் நுட்பங்களும் இந்நூலிற் பரக்கக் காணலாம். தாளச் சொற்கட்டுக்களை அமைத்து, இம்முறையில் எழுதப்பட்டு வெளிவரும் நூல் இஃது ஒன்றேன்றே

கூறலாம். இதற்கு முன் இம்முறையில் ஒன்றும் வெளி வந்ததாகக் காணப்படவில்லை. ஆடல், பாடல், கருவி என்னும் மூன்றும் இசைக்கலைக்கு இன்றியமையாதன. அவற்றுள் கருவியின் பாற்படும் தாள முறைகளையும் அவற்றின் நுட்பங்களையும் இசை பயில்வார் நன்கு அறிந் திருத்தல் வேண்டும் என்பது யாவரும் அறிந்தது. அதற்கு இந்நூல் மிகவும் பயன்படும் என்பது சொல்லாமலே விளங்கும்.

இத்தகைய சிறந்த நூலை ஆக்கி அளித்தவர் அண்ணா மலைப் பல்கலைக் கழகத்து மிருதங்க ஆசிரியரும், புகழ் பெற்ற மிருதங்க பரம்பரையினருமாகிய மைலாட்டூர் திரு. வி. சாமி ஐயர் அவர்களாவர். இவர்களுடைய தகுதியைப் பற்றியும் இந்நூலின் பெருமையைப் பற்றியும் புகழ்பெற்ற இசைப் புலவர்கள் இதற்கு அளித்திருக்கும் மதிப்புரை களால் இதன் சிறப்பு நன்கு விளங்கும். இந் நூலில் அச்சுப்பிழை நேராமல் அவ்வப்போது திருத்தி உதவி யவர் இப்பல்கலைக் கழகத்து வீணையாசிரியர் திரு. வி. எஸ். கோமதிசங்கர ஐயர் அவர்களாவார். இந்நூலை எழுதி முடித்தற்கு உடனிருந்து உதவிபுரிந்தவர் இந்நூலாசிரிய ரின் இளைய குமாரர் திரு. எஸ். இராமச்சந்திரன் ஆவார்.

இந்நூல் வெளியீட்டிற்கு வழக்கப்படி வேண்டுவன செய்து உதவி புரிந்தவர் இப்பல்கலைக் கழகத்துத் தமிழ் விரிவுரையாளரும், தமிழிசை ஆலோசனைக் குழுவின் அமைச்சரும் ஆகிய பண்டித வித்துவான் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களாவர்.

அரசினர் மொழியிலுள்ள மதிப்பிற் சிறிதும் தாழாது தமிழ்க் கூறுகளாகிய இயலையும், இசையையும் தம் கண் களைப்போல் மதித்துப் பாதுகாத்து வருபவர்களும் அறி வும் திருவும் ஒருங்கு அமையப்பெற்று இடையறாது அறச் செயல்களிலே மிகு நாட்டம் உடையவர்களும் ஆகிய செட்டிநாட்டரசர் அவர்கள் இத்தகைய நூற்காட்சியால் தமிழ் அன்பர்கள் இன்புறும் வண்ணம் செய்து வரும் பேருதவி மிகப் பாராட்டத்தக்கது. இது குறித்துத் தமிழ் நிலத்தார் நம் அரசர் பெருந்தகையார்க்குப் பெரிதும் கடமைப்பட்டவராவர்.

இந்நூலை ஆக்கியளித்த ஆசிரியர்க்கும் இதன் வெளி யீட்டிற்கு வேண்டுவனபுரிந்த உதவியாளர்க்கும் தமிழிசை ஆலோசனைக் குழுத்தலைவன் என்ற முறையில் என் நன்றி யறிவைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அண்ணாமலைநகர்
31—1—46.

# மிருதங்க பாடமுறை

## இரண்டாம் பதிப்பின்

## முன்னுரை.

---

திரு. வி. எஸ். கோமதிசங்கர ஐயர்
(வீணை விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்)
எழுதியது.

தமிழிசை வளர்ப்பதில் தமது சிறந்த அறிவு ஆற்றலைத் தெள்ளிய முறையில் சீராக எடுத்துக் காட்டிய பெருங்கொடை வள்ளல் செட்டிநாட்டரசர் அவர்களின் ஆதரவில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினின்றும் வெளியிடப்பெற்றுவரும் இசைத் தமிழ் வெளியீடுகளுள் "மிருதங்க பாடமுறை" என்னும் இப் புத்தகம் பன்னிரண்டாம் தொகுதியின் முதற் பகுதியாகும்.

எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும் என்ற சிறந்த வாக்கியம் போல இசைப் பகுதியிலும் சுருதியும் லயமும் இரு கண்களாகும். சுருதிப் பகுதியைச் சார்ந்த பாட்டுக்களும், அவைகளுக்குரிய சுரங்களும் எழுத்துக் களுக்கு நிகரானவை. லயப் பகுதியைச் சார்ந்த ஜதிகளும், தத்தக்காரச் சொற்களும், தாளங்களும் எண்களுக்கு நிகரானவை. சுருதி, சுர சம்பந்தமாகப் பல புத்தகங்கள் உள்ளன. ஆனால் லய, தாள சம்பந்தமாக இதுகாறும் தெளிவான எந்தப் புத்தகமும் இல்லையென்றே கூறலாம். அப் பெருங்குறையை மிருதங்க பாடமுறை என்ற இப் புத்தகம் ஒன்றே நிவர்த்தி செய்கின்றது. இம்மாதிரி ஓர் சிறந்த புத்தகத்தை வெளியிட்ட பெருமை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கே உரியது என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

இப் புத்தகத்தில் மிருதங்கம் பயிலும் மாணவர் களுக்குமட்டுமின்றி மிருதங்க வாசிப்பில் தேர்ந்த வித்து வான்களுக்கும் உபயோகப் படும்படியான விஷயங்கள் பல அடங்கி யுள்ளன. நான்கு ஆண்டுகளும் பயிலும் மாண வர்களின் திறமைக்குத் தக்கவாறு முதலாம் ஆண்டு. இரண்டாம் ஆண்டு, மூன்றும் ஆண்டு, நான்காம் ஆண்டு என்று பிரித்துப் பாட முறைகளை எளிமையாக மனப்பதிவு செய்வது போல எழுதப்பட்டுள்ளது. மிருதங்க வாத்தி யத்தில் முதல் ஆரம்பமாகிய "தத்—தித்—தொம்—நம்"

என்ற விரலமைதிகளைத் தெரிந்த ஒருவன் இப் புத்த கத்தை ஆதாரமாகக்கொண்டு பயின்று பெரிய வித்துவத் திறமையை அடையும் வண்ணம் வெகு சிறப்பாகவும், தெளிவாகவும் இப் புத்தகம் எழுதப்பட்டிருப்பது இந் நூலாசிரியரின் அனுபவஞானம், வித்துவத் ஞானம் இவைகளை நன்கு விளக்குகின்றது.

வாய்ப்பாட்டு, வீணை, பிடில், புல்லாங்குழல் இவை களில் மட்டும் திறமையடைந்த ஒவ்வொருவரும் இம் மிரு தங்க பாட முறைகளை நன்கு கவனித்தார்களானல் லய சம்பந்தமான எல்லாப் பிரிவுகளிலும் தேர்ந்த ஞானத்தை அடைவார்கள் என்பதில் சந்தேகமேயில்லை.

இன்னும் இந்நூலில் மாணவர்களுக்குப் போதுமான அளவு தாள சம்பந்தமான இலக்கணப் பகுதிகளையும், ஓர் சிறிது இசை சம்பந்தமான இலக்கணப் பகுதிகளையும், பல மிருதங்க வித்துவான்களின் வாசிப்புத் திறமை, அன்னாரின் சரிதங்கள் ஆகிய இவைகளையும் சுருக்கியும் விளக்கியும் எழுதியிருப்பதானது மாணவர்களுக்குமட்டு மின்றி பலதிறத்தவர்களும் அவர்களுடைய அறிவாற்றல் களை உணர்ந்துகொண்டு பயிற்சி பெறுவதற்கேற்ற வகை யில் அமைந்துளது.

இப் புத்தகத்தின் அருமை யுணர்ந்து பம்பாய், கல்கத்தா, டெல்ஹி முதலிய வெகு தூரதேசத்திலுள்ள அன்பர்களும் இப் புத்தகத்தை வாங்கிப் பயன் பெற்றுள் ளார்கள். ஏராளமான அன்பர்கள் இப் புத்தகத்தை விரும்பி அனுப்பும்படி கூறுகின்றனர். அதன் காரண மாகவே இப் புத்தகம் இரண்டாம் பதிப்பாக விரைவில் வெளியிடப் பெற்றது.

இந் நூலாசிரியர் முதன் முதலாக இப்புத்தகம் வெளி யிடும்போது இப் புத்தகம் முழுவதற்கும் நான் கூட இருந்து வேலைசெய்யும் வாய்ப்பு ஏற்பட்டது. லய சம்பந்த மான பல நுட்பங்களை அப்பொழுது நான் அடைய ஓர் அரிய சந்தர்ப்பத்தை இது உண்டாக்கியது. அந்த அனு பவங்கொண்டே இரண்டாம் பதிப்பை முழுதும் பரிசோதித் தும், பிழைகளைத் திருத்தியும், சேர்க்க வேண்டுவன சில வற்றைச் சேர்த்தும் வகைசெய்யும் உறுதியை யான் அடையப்பெற்றேன்.

லய சம்பந்தமான இவ்வரும் பணியை ஏற்றுப் பரி சோதித்துத் தொகுத்துப் புத்தகமாக்கவும், இரண்டாம்

பதிப்பிற்கு ஓர் முன்னுரை எழுதவும் வாய்ப்பளித்த இப் பல்கலைக் கழகத்தார்க்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பிறரால் செய்தற்கரிய பேரறமாகிய கல்விப் பணியில் ஈடுபட்டுப் பல்கலைக் கழகம் நிறுவி, தமிழிசை வளர்த்த பெருங்கொடை வள்ளல் ராஜா சர். அண்ணாமலைச் செட்டியாராகிய தம் தந்தையார் காட்டிய நெறியினின்று தமிழிசை பரவப் பல்கலைக் கழகத்தைப் பாதுகாத்துவரும் மாண்புமிக்க செட்டிநாட்டரசர் டாக்டர். ராஜா சர். முத்தைய செட்டியார் அவர்களுக்கு தமிழ்மக்களது நன்றி என்றும் உரியதாகும்.

# ஆக்கியோன் உரை.

---

**1938-ல்** நான் இங்கு உத்தியோகத்தில் அமர்ந்தேன். அப்போது கனம் சீனிவாச சாஸ்திரியாரவர்கள் வைஸ் சான்சிலராயும் டைகர் வரதாச்சாரியாரவர்கள் இசைக் கல்லூரித் தலைமையாசிரியராயும் இருந்தார்கள். சில வருடங்கள் சென்றபின் சர். கே. வி. ரெட்டி நாயுடு அவர்கள் வைஸ்சான்சிலராக வந்தார்கள். இவர்கள் சங்கீத ஞானமும் சங்கீத வித்துவான்களிடத்தில் அபிமானமும் உடையவர்களா யிருந்தமையால் அடிக்கடி இசைக் கல்லூரிக்கு வருவார்கள். இசையாசிரியர்களைக் கண்டு அன்போடு அளவளாவிப் பேசுவார்கள். அப்போதுதான் தமிழிசை யியக்கம் உண்டாயிற்று. செட்டிநாட்டு ராஜா ஸர். அவர்களுடைய பேராதரவினாலும், பெரும் பொருளுதவியினாலும் இசை மாநாடுகளும், இசைப்பாடற் போட்டிகளும் நடைபெற்றன. பழைய தமிழிசைப் பாடல்களைத் தேடித் தொகுத்து வெளியிடுவதும் புதிய பாடல்கள் கீத வர்ணங்கள் முதலியவற்றை ஆக்கி அச்சிடுவதும் ஆகிய முயற்சிகளும் எழுந்தன. இவ்வாறு தமிழிசை வளர்ச்சிக்கு வேண்டிய ஆக்க வேலைகள் நடந்து வரும்போது ரெட்டி நாயுடுகாரு அவர்கள் எனக்கு ஒரு கட்டளை யிட்டார்கள். "மிருதங்கக் கல்வி பயிலும் நான்கு வகுப்பு மாணவர்களுக்கும் கற்பிக்கத் தகுந்த முறையில் ஒரு பாடப்புத்தகம் எழுத வேண்டும்" என்பதுதான் அக்கட்டளை. உடனே ஆகட்டும் என்று சொல்ல என்னால் முடியவில்லை. சற்றுத் தயங்கினேன். என்னுடைய தயக்கத்தைக் கண்டும் அவர்கள் விடவில்லை. 'நீங்கள் கட்டாயம் எழுத வேண்டும்' என்று மீண்டும் அன்பு முறையில் கண்டிப்பான உத்திரவிட்டார்கள். அவர்களுடைய ஆணையை மறுக்க முடியாமல் நான் எழுதுவதாக ஒருவாறு ஒத்துக்கொண்டேன். ஆனாலும் புத்தகம் எழுதுவது பற்றிப் பெரிய திகைப்பு ஏற்பட்டது. இதற்கு முன் எத்தனையோ பிரபலமான மிருதங்க வித்துவான்கள் இருந்திருக்கிறார்கள். பல மாணவர்களுக்குக் கற்பித்தும் வந்திருக்கிறார்கள். ஆயினும் அவர்களில் ஒருவரேனும் ஒரு புத்தக வடிவத்தில் மிருதங்க பாடங்களை யெழுதினார்களில்லை. அப்படியிருக்க நாம் எப்படி யெழுதுவது என்று பல நாட்கள் சிந்தனை செய்து கொண்டிருந்தேன். என் குறிப்பையறிந்த டைகரவர்கள் 'நீங்கள் யோசிக்கவேண்டியதில்லை. இப்போது பாடஞ் சொல்லிவரும் முறையைத் தழுவி யெழுதினாற் போதும். அதற்குரிய தகுதி உங்க

ளிடம் இருக்கிறது, என்று என்னை ஊக்கப்படுத்தினர்கள். அதன் பிறகு கடவுள் அருளாலே தான் இது முற்றுப் பெறவேண்டுமென்று எல்லாப் பொறுப்பையும் அவரிடம் வைத்து, பல்கலைக் கழகத்தார் வகுத்திருக்கும் பாடத் திட்டங்களையும், அதற்கேற்றவாறு நான் பாடஞ் சொல்லி வரும் முறைகளையும் சிறந்த மிருதங்க வித்துவான்களோடு சுமார் முப்பது ஆண்டுகளாகப் பழகியும் வாசித்தும் வந்த என் அநுபவங்களையும் நவீன முறைகளையுந் தழுவிப் பாடத்திட்டங்களை நான்கு கூறுபடுத்திக் கொண்டு முதல் வகுப்பு, இரண்டாவது வகுப்பு மாணவர்களுக்குக் கற்பிக்க வேண்டிய அளவு மிருதங்க பாடங்களையும் இசையிலக் கணங்களையும் எழுதி முடித்தேன். இதற்கு முன்பு எழுதும் பயிற்சி எனக்கு அதிகம் இல்லாமையால் மற்றைய இரண்டு வகுப்புப்பாடங்களையும் நானே யெழுது வது சற்றுச்சிரமமாயிருந்தது. அதனல் மிருதங்க வாசிப்பும் எழுத்து வேலையுந் தெரிந்த ஒருவர் துணையாயிருப்பது நல்லதென எண்ணித் தஞ்சையிலிருந்த என் இளைய குமாரன் சிரஞ்சிவி இராமச்சந்திரனை வரவழைத்து உடன் வைத்துக்கொண்டு மூன்ருவது நான்காவது வகுப்புப் பாடங்களையும் இவற்றிற்கு வேண்டும் அளவில் இசை யிலக்கணங்களையும் எழுதிமுடித்தேன். இதில் என் இளைய குமாரன் செய்த உதவி குறிப்பிடத்தக்கது.

இதன்கண் அடங்கியுள்ள விஷயங்கள் ஆரம்பப்பாடங் கள் முதலாக மிருதங்க வித்துவான்களின் சரித்திரம் ஈருக இந்நூலில் அடங்கிய பாட விவரங்கள் என்னும் பகுதியில் முறைப்படி காட்டப்பட்டுள்ளன.

இப்புத்தகம் முதல் முறையாக எழுதப்பட்டிருப்பதால் என் அறியாமை காரணமாகப் பிழைகள் நேர்ந்திருக்கவுங் கூடும். பிழைகள் காணப்பட்டால் அவையெல்லாம் என் னைச் சேர்ந்தனவாகவும், நல்லன சிலகாணப்படுமானல் அவை என் சிறிய தந்தையாரும் என் குருநாதரும் ஆகிய மைலாட்டூர்க் கிருஷ்ணையரவர்களுக்கே யுரிமையாகவுங் கொள்ளவேண்டுகிறேன். அன்றியும் இப் புத்தகத்தில் செய்யவேண்டிய திருத்தங்களையாவது இன்னும் புதி தாகச் சேர்க்கவேண்டிய பகுதிகளையாவது வித்துவான்கள் தெரிந்து கூறுவார்களானல் அவற்றை அடுத்த பதிப்பில் சேர்த்து அச்சிடும்படி ஏற்பாடு செய்வேன். மற்றும் இந் நூல் சம்பந்தமான விபரங்களை இதனுடன் இணைக்கப்பட் டுள்ள பொருளடக்கத்திற் காணலாம்.

இப்புத்தகத்தை யெழுதும்படி அன்போடு கட்டளை யிட்டு என்னை வற்புறுத்திய சர். கே. வி. ரெட்டி நாயுடுகாரு அவர்கள் இப்போது இல்லையாயினும் அவர்களுக்கும், எனக்கு ஊக்கம் ஊட்டி எழுதும்படி தூண்டிய டைகர் வரதாச்சாரியார் அவர்களுக்கும், அச்சிடுதற்கு ஏற்ற வாறு எழுதும் முறைகளையும் அடையாள விபரங் களையும் எடுத்துக்காட்டி அச்சுப் பிழைகள் நேராதபடி அவ்வப்போது திருத்தம் செய்து உதவிய வீணையாசிரியர் வி. எஸ். கோமதிசங்கரஐயரவர்களுக்கும், என் மனமார்ந்த நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்நூலை அன்போடு பார்வையிட்டு மதிப்புரைகள் வழங்கிய திருவாளர்கள் சங்கீத கலாநிதி டைகர்–வரதாச் சாரியார் அவர்களுக்கும், சங்கீத ரத்நாகரம் அரியக்குடி இராமாநுச ஐயங்காரவர்களுக்கும், திருவனந்தபுரம் சமஸ் தான மிருதங்க வித்துவான்களான தஞ்சை V. S. வைத் தியநாதையரவர்களுக்கும், பழநி M. சுப்பிரமணியபிள்ளை யவர்களுக்கும், தஞ்சை P. S. சுந்தரமையர் B. A., L. T. அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைச் செலுத்து கிறேன்.

அறிவு ஆற்றல்களிற் குறைந்தஎன்னையும் இப்பெரிய முயற்சியில் ஈடுபடுத்தித் தோன்றாத்துணையாயிருந்து முற் றுப் பெறச்செய்த எல்லாம் வல்ல இறைவனுக்கு என் உளமார்ந்த வணக்கம் உரியதாகும்.

இங்ஙனம்,

அண்ணாமலைநகர்.
31—1—46

மைலாட்டூர் V. சாமி ஐயர்
மிருதங்க ஆசிரியர்.

சங்கீத கலாநிதி டைகர்

## திரு. கே. வரதாச்சாரியார் அவர்கள்

(Principal, Sangitha Siromani Course,
Kalakshetra Adyar, Madras)

### அளித்த மதிப்புரை

*ஸ்ரீமான் மைலாட்டூர் சாமி ஐயர் அவர்களை எனக்குச் சுமார் நாற்பது வருடங்களாகத் தெரியும். அவர்கள் மிகவும் பெயர்வாய்ந்த ஒரு குடும்பத்திலிருந்து வந்தவர்கள். மிருதங்கம் கச்சேரிகளில் வாசிக்கும் திறமையும், வித்தியார்த்திகளைப் பழக்கும் நைபுண்யமும் நன்கு வாய்ந்தவர். மேற்சொல்லிய விசேடங்களுடன் மிகவும் தெய்வ பத்தியும் பரோபகார சிந்தனையுங்கொண்டு வைதிக விருத்தியில் நன்கு நடந்துகொள்ளும் நண்பராவார்.*

*இவர் ராஜா ஸர். அண்ணாமலை வள்ளல் அவர்களால் நிறுவப்பட்ட இசைக்கல்லூரியில் எனது தலைமை உபாத்தியாயப் பதவியில் ஆறு வருட காலம் மிருதங்க ஆசிரியராக இருந்து திருப்திகரமாய் எனது கச்சேரிகளுக்கு வாசித்தும் வகுப்பில் மாணவர்களைப் பயிற்றியும் நல்ல கீர்த்தி பெற்றவர். இவர்கள் ஷை கலாசாலைக்கு நான்கு வருடங்களுக்குரிய பாடமுறைப்படி பாடத்திட்டங்களைப் பிரித்து எழுதியிருக்கும் விஷயங்களை நான் நன்கு சோதித்ததில் மிகவும் தகுதியுள்ளதென்றே உணர்ந்தேன் என்பதை இதன் மூலம் திருப்தியுடன் எனது அபிப்பிராயமாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இத்தகைய கிரந்தங்கள் வகுப்பு வாரியாக மாத்திரமேயல்லாது இன்னும் அநேக பொதுப்படையான விஷயங்களையுஞ்சேர்த்து ஷை யூனிவர்ஸிடியில் இவரால் நூல்களாக வெளிவரும் என்று எதிர்பார்க்கும் உண்மை நண்பர்களில் ஒருவனாவேன்.*

சென்னை, 3—1—46

---

சங்கீத ரத்னகர, சங்கீத கலாநிதி

## அரியக்குடி. திரு. இராமானுஜ ஐயங்காரவர்கள்

### அளித்த மதிப்புரை

*எனதன்பார்ந்த பெரியார்களுக்கும் சங்கீத அபிமானிகளுக்கும், சங்கீதம் வாத்தியங்கள் பயின்றுவரும் மாணவர்களுக்கும் ஒரு விக்ஞாபனம் :—*

நம் ஸ்ரீமான் மைலாட்டூர் மிருதங்க வித்துவான் V. சாமி ஐயரவர்கள் எனக்குப் பாலியத்திலிருந்து நிரம்பவும் சிநேகமுள்ளவர் என்னுடன் பாலிய காலத்திலிருந்து பல கச்சேரிகளில் வாசித்திருக்கிறார். அவரும் பழங்காலத்துச் சங்கீத வாத்தியமாகக் கருதப்படும் மிருதங்கத்தில் நிரம்பவும் ஈடுபட்டு உழைத்திருக்கிறார். அதன் பலனாகத் தற்போது அவர் மிருதங்க பாடமுறைகளைப் பற்றி ஒரு புத்தகம் எழுதியுள்ளார். அதை நான் பார்வையிட்டேன். மிகவும் நல்லமுறையில் அமைந்திருக்கிறது. இப்புத்தகம் சங்கீத கலாசாலைகளில் மாணவர்களுக்கு மிகவும் உபயுக்தமானது. ஆகையால் எல்லோரும் இதை ஆதரித்தல் வேண்டும்.

கும்பகோணம், 8—6—45

---

## திருவனந்தபுரம் சமஸ்தான மிருதங்க வித்துவான்
## தஞ்சை திரு. V. S. வைத்தியநாத ஐயரவர்கள்
## அளித்த மதிப்புரை

மிருதங்க வித்துவான் மைலாட்டூர் ஸ்ரீ வெ. சாமிஐயர் அவர்கள் எழுதிய "மிருதங்க பாட முறை" யைப் பார்வையிட்டேன். ஒலிவடிவிலுள்ளதை வரிவடிவிலாக்கிய அவர்களின் ஊக்கமும், பரிசிரமமும், பொறுமையும் மிகவும் பாராட்டற்குரியனவே.

கலாசாலையிற் கற்பிக்கப்படும்போது வாத்தியத்தில் உண்டாக்கிக்காட்டும் ஒலியை மாணவர்கள் பிறகு தனியே அப்பியசித்துத் தேர்ச்சிபெறத் தக்கவாறு தெளிவாகவும் விரிவாகவும் முறையாகவும் எழுதுவதென்பது யார்க்கும் எளிதல்ல. ஆயினும் நீண்டகால அநுபவமும் விடா முயற்சியுமுள்ள ஸ்ரீ சாமி ஐயர் அவர்களால் தயாரிக்கப் பட்ட "மிருதங்க பாட முறை" மாணவர்களுக்கும் ஏனையோர்க்கும் பயன்படும் என்று நம்புகிறேன்.

தஞ்சாவூர், 12—1—46.

---

## திருவனந்தபுரம் சமஸ்தான மிருதங்க வித்துவான்
## பழநி திரு. M. சுப்பிரமணியபிள்ளை அவர்கள்
## அளித்த மதிப்புரை

அண்ணாமலைப் பல்கலைக்கழக இசைக்கல்லூரியில் மிருதங்க ஆசிரியராயிருக்கும் ஸ்ரீ V. சாமி ஐயர் அவர்களால்

எழுதப்பட்ட மிருதங்க பாடமுறை என்ற புத்தகத்தைப் பார்வையிட்டேன். மிருதங்க பாட முறை சம்பந்தமாக ஒரு புத்தகம் எழுதுவதென்றால் நல்ல யோக்கியதாமிச மும் உயர்ந்த ஆராச்சியும் அதிக அனுபவமும் வேண்டும். அதில் ஸ்ரீ V. சாமி ஐயர் அவர்கள் மேலே குறிப்பிட்டபடி நல்ல அனுபவமுள்ள வித்துவான். அன்னாரின் முயற்சி யிலும் புத்தி சாதுர்யத்திலும் ஏற்படுத்திய மிருதங்க பாட முறை என்ற புத்தகம் மிகவும் போற்றத்தகுந்ததே. கலாசாலைகளில் மிருதங்கம் பயிலும் மாணவர்களுக்கும் தனியாக மிருதங்கம் அப்பியசிப்பவர்களுக்கும் இப்புத்தகம் மிகவும் பயன்படும் என்பது எனது உண்மையான அபிப் பிராயம்.

திருச்சி, 7—8—45.

---

சங்கீதாபிமானி

## தஞ்சை திரு. P. S. சுந்தரம் ஐயரவர்கள், B. A., L. T.

### அளித்த மதிப்புரை

சிதம்பரம் அண்ணமலைநகரில் விளங்கும் அண்ணமலை சர்வ கலாசாலையைச் சேர்ந்த சங்கீதக் கல்லூரியில் மிரு தங்க வித்தியா போதகர் ஸ்தானம் வகித்துவரும் ஸ்ரீமது வித்துவான் ஸ்ரீ மைலாட்டூர் V. சாமி ஐயர் எழுதியுள்ள "மிருதங்க பாடமுறை" என்னும் அரும்பெரும் நூலை நான் பார்வையிட்டு, மிகச் சந்தோஷத்துடன், இந்த முக வுரையை வித்துவான்களுக்குச் சமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீ பரத முனிவர் தமது 'நாட்டிய சாஸ்திரம்' என் னும் பெரிய கிரந்தத்தில் மிருதங்கத்தின் பெருமையை எழுதும்போது

"யஸ்து தாளம் நஜாநாதி நஸகா³தா நவாத³க:"
(எவர் தாளம் இன்னதென்று அறிந்துகொள்ளவில்லையோ அவர் பாடவும் வாத்தியம் வாசிக்கவும் தகுதியானவர் அல் லர் என்பதாம்) ஸ்ரீ ஐயர் தமது நூலில் தாளவிவரத்தைப் போதனு முறையைத் தழுவிப் படிப்படியாக எழுதியிருப் பது வித்தையைக் கற்பிப்போருக்கும் சரி, கற்பவருக்கும் சரி அதிக உபயோகமுள்ளது என்பது என் பூரண அபிப் பிராயமாகும். முனிவர் தாளத்தின் அங்கங்கள் மூன்றுகும் என்னும் விஷயத்தை,

" அங்க³ பூ⁴ தாஹி தாலஸ்ய யதி வாணிலயா: ஸ்ம்ருதா:" (தாளத்தின் மூன்று அங்கங்கள் யதி பாணி லயம் என்பவையாம்) என எழுதியுள்ளார். இந்த அங்கங்கள் சம்பந்தமாயும் இதர தாள பரிபாஷைகளைப்பற்றியும், புராதன கிரந்தங்களின் ஆதாரங்களைக் காட்டித் தெளிவாய் அவர் எழுதியதைப் பார்க்க ஆனந்தமடைந்தேன்

மேலும், தாளத்தில் "மார்க்கம்" "தேசி" என்றுள்ள இருவிபாகங்களையும், அநுபவத்துக்கு இணங்கிய படி எழுதியது மிக மெச்சத்தக்கதாகும். இம்மாதிரியாக, சங்கீதக் கல்லூரி வித்துவான்கள் லோகோபகாரமாகத் தமிழ்ப் பாஷையில் நூல்களை எழுதிப்பிரசுரிப்பது அவர்கள் முதற் கடமை என்பது என் அபிப்பிராயம்.

ஸ்ரீ சாமி ஐயர் இந்நூலை எழுதியதற்கு என் சந்தோஷத்தை வித்துவான்களுக்குத் தெரிவிப்பதுடன் அவர் இன்னும் நுட்பமான விஷயங்கள் அடங்கிய புத்தகங்களை எழுதும்படி ஸ்ரீ நடராஜப்பெருமானை அவருக்கு ஊக்கமும் ஆயுளும் அளிக்கும்படி மிகு வணக்கத்துடன் பிரார்த்திக்கிறேன்.

தஞ்சாவூர், 16—1—1946.

---

## திருவனந்தபுரம் சமஸ்தான மிருதங்க வித்துவான் பாலக்காடு, திரு. T. S. மணி ஐயரவர்கள் அளித்த மதிப்புரை.

மிருதங்க வித்துவான் ஸ்ரீமான் மைலாட்டூர் சாமி ஐயர் அவர்கள் எழுதியிருக்கும் "மிருதங்க பாடமுறை" யென்னும் புத்தகத்தைப் படித்துப் பார்த்து ஒரு சிறிய மதிப்புரையை மிகுந்த சந்தோஷத்துடன் எழுதுகிறேன்.

நம் கருநாடக சங்கீதத்தில் முக்கிய அங்கமாகிய மிருதங்க வாத்தியப் படிப்பைப் புத்தக வடிவமாகப் போதிப்பது மிகவும் சிரமம். அப்படிப்பட்ட சிரமமான காரியத்தை, அனுபவத்திலும் வாசிப்பிலும் மிகச்சிறப்படைந்த ஸ்ரீமான் சாமி ஐயரவர்கள் மிக நன்ருக எழுதி யிருக்கிருர்கள். பாடங்கள் மிகவும் விபரமாகவும் எளிய நடையில் எல்லோரும் விளங்கிக் கொள்ளும்படியும் இந்நூலில் அமைந்திருக்கின்றன. மிருதங்க வாத்தியத்தில் ஆர்வமுள்ள எல்லோருக்கும் உபயோகப் படுமென்று நம்புகிறேன்.

---

# இந்நூலில் அடங்கிய பாட விவரங்கள்

# குறியீடுகளின் விளக்கம்

, இது ஒரு அட்சரகால நிறுத்தத்தைக் குறிக்கும்.

; இது இரண்டு அட்சரகால நிறுத்தத்தைக் குறிக்கும்.

| இது ஒரு தாள வட்டத்தின் பகுதியைக் குறிக்கும்.

|| இது ஒரு தாள வட்டத்தின் முடிவைக் குறிக்கும்.

- இது சதிகளின் அடுக்குகளைப் பிரித்துக் காட்டுவதைக் குறிக்கும்.

= இது சதிகளின் இடையே இடப்பட்டிருந்தால் ரூபகம், சாப்பு, சம்பை இம்மூன்று தாளங்களில் வரும் இரண்டாவது தட்டை (அடியை)க் குறிக்கும்.

—— இது சதிகளின்கீழ் இடப்பட்டிருந்தால் மத்திம காலமென்பதைக் குறிக்கும்.

† இது புரட்டல்களைக் குறிக்கும்.

* இது மோருவைக் குறிக்கும்.

குறிப்பு :— இப்புத்தகத்தில் தத் - தொம் - நம் - தக் - இவைகள் ஒரு அட்சரகால அளவுகளையே குறிக்கும்.

# மிருதங்க பாட முதற் குறிப்பு அட்டவணை

## மிருதங்கத்தில் வாசிக்கப்படும் சொற்களுடைய
# விரல்கள் அமைப்பு

1. மீட்டு என்பது வலது கைப் பெருவிரலைத் தூக்கிக்கொண்டு மோதிர விரலை, சோறு அல்லது கரணை யில் ஊன்றிக்கொண்டு ஆட்காட்டி விரலால் வெட்டுத்தட்டு என்கிற மீட்டின்மேல் பலமாக அடித்து வாசிப்பது.

2. முழுச்சாப்பு என்பது, வலதுகைச் சுண்டு விரலால் சோறு அல்லது கரணையில் நுனி விரல் படும்படி யாகத் தட்டி வாசித்தல்.

3. அரைச்சாப்பு என்பது, கரணையில் சரிபாதி இடத்தில் கையைச் சாய்த்து வைத்துக்கொண்டு உள்ளங் கையில் சுண்டுவிரலினுடைய அடிப்புறத்தால் வாசித்தல்.

4. தொப்பி பொத்துதல் என்பது, தொப்பிப் பக்கமாகிய இடப்பக்கத்தின் நடுவில் இடதுகை நாலு விரல் களால் பொத்தி வாசித்தல்.

5. தொப்பி விட்டடி என்பது, இடது பக்கம் இடது கை நாலு விரல்களில் விரல்கள் அளவு வரையில் படும்படி வாத்தியத்தின் கவணை அல்லது முத்திரையில் தட்டி வாசித்தல்.

6. கும்காரம் என்பது, தொப்பியில் மாவு வைத்து இடதுகை உள்ளங்கையைத் தூக்கிக்கொண்டு தொப்பித் தோல் ஓரத்தில் மோதிர விரல் பெரிய விரல்களினல் பலமாகத் தட்டி, கனுக்கை அல்லது கட்டையில் ஓரத்தைச் சேர்த்துத் தள்ளி வாசித்தல்.

1. தா – என்ற சொல்லு தொப்பி பொத்துதலாகும்.

தீ – என்பது வலது பக்கம் கரணையில் அல்லது சோற்றில் ஆட்காட்டி விரலைத் தூக்கிக்கொண்டு பாக்கி மூன்று விரல்களையும் சேர்த்துப் பொத்தி வாசிப்பது.

தொம் – என்பது தொப்பி விட்டடியாகும்.

நம் – என்பது மீட்டு என்பதை வாசித்தல் ஆம்.

2. ‘தி’ வாசிக்கும் இடமே “கி, க, த” முதலானவை களும் பேசும் இடமாம். ‘ட’ என்பது ஆட்காட்டி விரலால் சோற்றில் தட்டுவது. இந்த ‘ட’ என்பதே ‘ரி, கி’ ஆகவும் பேசும். ஒவ்வொரு சமயங்களில் ‘தா’ வே ‘க’ வாகவும் பேசும்.

3. 'தின்' என்பது கரணைக்கும் வெட்டுத்தட்டாகிய மீட்டுக்கும் நடுவில் இருக்கும் இடத்தில் ஆட்காட்டி விரலால் மெதுவாகவும் அழுத்தமாகவும் அதாவது புத்தி கூர்மையுடன் நிதானித்து வாசித்தலாகும்.

4. 'தொம், என்பதே 'ஜம்' ஆகும். அதாவது தொப்பி விட்டடியும் சாப்பும் சேர்த்துக் கொடுப்பதுவே. 'தீன்' என்பது சோற்றில் நாலு விரல்களால் விட்டடி போல் தட்டுவது.

5. 'நம்' என்பது 'ணம், த' இவைகளும் ஆகும்.

6. இன்னும் சாத்திர ரீதியாகவும், அனுபோக ரீதியாகவும், அதுவும் ஒவ்வொரு பெரியவர்களுடைய அனுபோக ரீதியாகவும் மிருதங்கத்தில் வாசிக்கப்படும் ஜதிகளுக்கு அனேகவித பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன. உதாரணம்:— 'த தா' 'தி தீ' 'தெ' 'தை' 'தெய்' 'தொம்' 'தோம்' இப்படி வருவதுபோல் இன்னமும் 'ந' 'ஞ' 'நெ' 'ண' 'நா' 'ணம்' 'ணு' என்றும் 'ஜ' 'ஜி' 'ஜெ' 'ஜே' 'ஜம்' என்றும் இன்னும் பற்பல ஜதிகள் வேறு வேறாக உண்டு. எல்லாவற்றையும் எழுதுவது முடியாத காரியம். ஆகையால் சில ஜதிகள் மட்டும் இவ்விடத்தில் எழுதப்பட்டிருக்கின்றன.

7. 'கிடதக' என்கிற சொல்லே ஒரு சமயம் 'தரிகிட' என்ருகும். வாயினுல் சொல்லுவது ஒன்றிருக்கும். வாத்தியத்தில் அமைந்திருக்கும் விதம் வேறு மாதிரியாக இருக்கும். அதாவது 'தகதரி கிடதக' என்று வாயினுல் சொல்லும் சொல்லானது, வாத்தியத்தில் 'டதகத கிடதக' 'ரிதகத கிடதக' என்று அமைந்திருக்கும். இன்னும் 'கிடதக' என்பதை 'தரிகிட' என்றும் மாற்றலாம். இப்படிப் பழமையான சம்பிரதாயத்தை ஒட்டியும் நவீன சம்பிரதாயத்தை ஒட்டியும் ஒரே சொல்லே வாசிப்பதற்குப் பல பெயர்களும், மேற் சொல்லியபடி அனுபவங்களில் மாற்றி வாசிப்பதும் தொன்று தொட்டுப் பழக்க வழக்கங்களில் வந்திருக்கின்றன.

8. இன்னமும் பரமேசுவரன் ஐந்து முகங்களினின்றும் முறையே 'த தி தொம் நம் ஜம்' என்னும் ஐந்து ஜதிகளும் அவர் கையில் பிடித்த டமருகத்தினின்றும் உப ஜதிகள் என்பதும் உண்டாயின. ஆகச்சூத்திரம் பதினென்கிற்குள் அனேக ஜதிகளும் அடங்கி இருப்பதால் அவ்வப்போது பெயர்கள் மாறி மாறி வருவதும் இயற்கையே

இந்தச் சதி பேதங்களைத் தேவவாத்தியங்களில் ஒன்றாகிய மிருதங்கத்தில்தான் சௌகரியமாகவும் மனத் திருப்தியாகவும் கொடுத்து வாசிக்கலாம். ஆகையால் சதி மாறுதலோ பெயர் மாறுதலோ எது எப்படி இருந்தபோதிலும் மிருதங்க வாத்தியத்தின் பஞ்சப் பிராணங்களை அனுசரித்தும், பாட்டுக்கள், வாத்தியங்கள் முதலியவைகளுக்கு அனுகூலமாகவும், பக்க வாத்திய முறை தவறாமலும் வாசிக்கவேண்டியது அவசியம்.

---

# மாத்திரைகளின் விபரம்

---

சில நூல்களில் ஒரு அட்சரத்திற்குக் கால் மாத்திரை வீதம் நான்கு அட்சரங்களுக்கு ஒரு மாத்திரை என்று சொல்லியிருப்பதின் காரணம் பஞ்சதாளம், 108 தாளங்களில் அட்சரங்கள் மிகுதியாக வருவதால் சுருக்கமாக ஓர் அளவைக் காட்டவேண்டியதாய் இருக்கக் கூடும். இந்நூலோ, போதனை முறையில் பாடங்கள் எழுதியிருப்பதால், மாணவர்களுக்கு எளிதில் மனதில் படும்படியாக, ஓர் அட்சரத்திற்கு மத்தியிலிருக்கும் அளவையும் ஓர் அங்கத்திற்கு மத்தியிலிருக்கும் அளவையும் மாத்திரைகள் என்றே காட்டி எழுதப்பட்டிருக்கிறது. பொதுவாக மாத்திரை என்ற சொல் அளவு என்று பொருள் படுவதால் உள்ளடக்க அட்சரத்திற்கும் மாத்திரை என்றே பெயர் சொல்லப்பட்டிருக்கிறது. இதைச் சூட்சம மாத்திரை என்றே கொள்ளவேண்டும்.

இந்த நூலிலேயே, சோடசாங்கம், பஞ்சதாளம் என்பவற்றைக் கூறுமிடங்களில் நான்கு அட்சரங்களுக்கு ஒரு மாத்திரை என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதைத் தூல மாத்திரை என்று கொள்ளவேண்டும். எதற்கும் தூலம் சூட்சமமென்னும் இரண்டுமிருப்பதால், மாத்திரைகளும் தூல சூட்சமங்களாகவே பாவித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

---

மைலாட்டூர்

ஸ்ரீ V. சாமி அய்யர் அவர்கள் இயற்றிய

# மிருதங்க பாடமுறை

( முதல் வகுப்பு )

## ஒரு ஆவர்த்தனப் "பாடங்கள்"

*ஆதி தாளம்.* *அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.*

| | 4 | 4 | 4 | 4 | | 4 | 4 | | 4 | 4 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | த , ; - | இ , ; - | தொம் , ; - | நம் , ; - | \| | த , ; - | இ , ; - | \| | தொம் , ; - | நம் , ; | \|\| |
| 2. | த , ; - | த , ; - | இ , ; - | இ , ; - | \| | தொம் , ; - | தொம் , ; - | \| | நம் , ; - | நம் , ; | \|\| |

4 2 2 4 2 2 | 4 2 2 | 4 2 2
3. த, ; - கி, ட, - தி, ; - கி, ட, - | தொம், ; - கி, ட, - | நம், ; - கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 | 2 2 2 2 | 2 2 2 2
4. த, த, - கி, ட, - தி, தி, - கி, ட, - | தொம், தொம், - கி, ட, - | நம், நம், - கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 | 2 2 2 2 | 2 2 2 2
5. த, த, - த, கிட - தி, தி, - தி, கிட | தொம், தொம், - தொம், கிட | நம், நம், - நம், கிட ||

4 2 2 4 2 2 | 4 2 2 | 4 2 2
6 த, ; - தரி கிட - தி, ; - தரி கிட - | தொம், ; - தரி கிட - | நம், ; - தரி கிட ||

2 2 4 2 2 4 | 2 2 4 | 2 2 4
7. த, த, - தரிகிட - தி, தி, - தரிகிட - | தொம், தொம், - தரிகிட - | நம், நம், - தரிகிட ||

2 2 4 2 2 4 | 2 2 4 | 2 2 4
8. தரி கிட த, ; - தரி கிட தி, ; - | தரி கிட தொம், ; - | தரி கிட நம், ; ||

```
     4      2   2    4      2   2        4       2      2           4      2    2
9.   தரிகிட  த,  த, -  தரிகிட  தி,  தி,    -  | தரிகிட  தொம்,  தொம், - |  தரிகிட  நம்,  நம்,  ||

     4      2   2    4      2   2        4       2      2           4      2    2
10.  தரிகிட  த,  கிட -  தரிகிட  தி,  கிட   -  | தரிகிட  தொம்,  கிட   - |  தரிகிட  நம்,  கிட  ||
```

## இரண்டு ஆவர்த்தனப் " பாடங்கள் "

ஆதி தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

```
     4       2   2      4       2    2       4      2     2          4      2    2
1.   த,; -  தரி  கிட — த,;  -   கி,   ட,  - | தி,; -  தரி   கிட     |  தி,; - கி,   ட,  ||

     4           2   2      4        2    2       4      2     2          4      2    2
     தொம்,;- தரி  கிட — தொம்,; - கி,   ட,  - | நம்,; -  தரி   கிட     |  நம்,; - கி,   ட,  ||
```

2 2 2 2 4 2 2 | 2 2 2 2 | 4 2 2

2. த, - த, - தரி கிட - த,; - கி, ட, - | தி, தி, - தரி கிட | தி,; - கி, ட, ||

2 2 2 2 4 2 2 | 2 2 2 2 | 4 2 2

தொம், தொம், - தரி கிட - தொம்,; - கி, ட, - | நம், நம், - தரி கிட | நம்,; - கி, ட, ||

3. 2 2 4 2 2 2 2 | 2 2 4 | 2 2 2 2

த, த, - தரிகிட - த, த, - கி, ட, - | தி, தி, - தரிகிட | தி, தி, - கி, ட, ||

2 2 4 2 2 2 2 | 2 2 4 | 2 2 2 2

தொம், தொம், தரிகிட - தொம், தொம், கி, ட, - | நம், நம்; தரிகிட - | நம், நம், கி, ட, ||

2 2 4 4 4 | 2 2 4 | 4 4

4. தரி கிட - த,; - கி,; - ட,; - | தரி கிட - தி,; - | கி,; - ட,; ||

2 2 4 4 4 | 2 2 4 | 4 4

தரி கிட - தொம்,; - கி,; - ட,; - | தரி கிட - நம்,; - | கி,; - ட,; ||

2 2 2 2 4 4 | 2 2 2 2 4 4

5. தரி கிட - த, த, - கி,; - ட,; - | தரி கிட - தி, தி, - | கி,; - ட,; ||

2 2 2 2 4 4 | 2 2 2 2 4 4

தரி கிட - தொம், தொம், - கி,; - ட,; - | தரி கிட - நம், நம், | கி,; - ட,; ||

## இரண்டு ஆவர்த்தனப் "பாடங்கள்"

ரூபக தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

2 2 2 2 2 2 | 2 2 2 2 2 2

1. த, த, = த, - தி, தி, தி, - | தொம், தொம், = தொம், - நம், நம், நம், ||

2 2 2 2 2 2 | 2 2 2 2 2 2

2. த, கி, = டா - தி, கி, டா - | தொம், கி, = டா - நம், கி, டா ||

2 2 2 2 2 2 | 2 2 2 2 2 2
3. த, தரி = கிட - தி, தரி கிட - | தொம், தரி = கிட - நம், தரி கிட ||

2 2 2 2 2 2 | 2 2 2 2 2 2
4. தரி கிட = த, - தரி கிட தி, - | தரி கிட = தொம், - தரி கிட நம், ||

## நான்கு ஆவர்த்தனப் " பாடங்கள் "

ரூபக தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

2 2 2 2 2 2 | 2 2 2 2 2 2
1. த, தரி = கிட - த, கி, ட, - | தி, தரி = கிட - தி, கி, ட, ||

2 2 2 2 2 2 | 2 2 2 2 2 2
தொம், தரி = கிட - தொம், கி, ட, - | நம், தரி = கிட - நம், கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
2. த, தரி = கிட - த, தரி கிட | தி, தரி = கிட - தி, தரி கிட ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தொம், தரி = கிட - தொம், தரி கிட | நம், தரி = கிட - நம், தரி கிட ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
3. தரி கிட = த, - த, கி, ட, | தரி கிட = தி, - தி, கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தரி கிட = தொம், - தொம், கி, ட, | தரி கிட = நம், - நம், கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
4. தரி கிட = த, - தரி கிட த, - | தரி கிட = தி, - தரி கிட தி, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தரி கிட = தொம், - தரி கிட தொம், - | தரி கிட = நம், - தரி கிட நம், ||

## எட்டு ஆவர்த்தனப் " பாடங்கள் "

ரூபக தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

1\.
2 2 2 2 2 2 2 2 2 2 2 2
த, தரி = கிட - த, தரி கிட -| த, தரி = கிட - த, கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தி, தரி = கிட - தி, தரி கிட -| தி, தரி = கிட - தி, கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தொம், தரி = கிட - தொம், தரி கிட -| தொம், தரி = கிட - தொம், கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
நம், தரி = கிட - நம், தரி கிட -| நம், தரி = கிட - நம், கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தரி கிட = த, - தரி கிட த, -| தரி கிட = த, - த, கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தரி கிட = தி, - தரி கிட தி, - | தரி கிட = தி, - தி, கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தரி கிட = தொம், - தரி கிட தொம், | தரி கிட = தொம், - தொம், கி, ட, ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தரி கிட = நம், - தரி கிட நம், - | தரி கிட = நம், - நம், கி, ட, ||

குறிப்பு :— மேற்சொன்ன எல்லாப் பாடங்களையும், நான்கு காலங்களில் வாசித்துப் பழக வேண்டியது. முறையே முதற் காலம் ஒரு தடவையும், இரண்டாங்காலம் இரண்டு தடவைகளும், மூன்றாங் காலம் நான்கு தடவைகளும், நான்காம் காலம் எட்டுத் தடவைகளும் வாசிக்கவேண்டியது.

## இரண்டு ஆவர்த்தனங்கள் கொண்ட "தளாங்கு" என்ற பயிற்சி.

ஆதி தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

4   1 2 1   1 2 1   4   1 2 1   1 2 1   4   4

1. த,; - தளாங்கு தளாங்கு தத்தித் | தளாங்கு தளாங்கு | தா; - தத்தித் ||

1 2 1   4   1 2 1   4   1 1   1 2   1   2   2   2   2   2

தளாங்கு தத்தித் தளாங்கு தத்தள | , ங்கு தளாங் கு - த, | திங், கி, ண, தொம், ||
(,தா)

## இரண்டு ஆவர்த்தனங்கள் கொண்ட "தகஜிண" என்ற பயிற்சி.

ஆதி தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

4   4   4   2   2   4   4   4   2   2

1. த,; - தகஜிண தகஜிண தத் தத் | தகஜிண தகஜிண | தா; - தத் தத் ||

4   2   2   4   2   2   2   2   2   2   2   2   2   2

தகஜிண தத் தத் தகஜிண தத் தக | ஜிண - த, க, த, | திங், கி, ண, தொம், ||
(,தா)

## நான்கு ஆவர்த்தனங்கள் கொண்ட " தளாங்கு " பயிற்சி.

ஆதி தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

```
    12   1   4             12   1   4         12   1    12   1        4             12  1
1.  தளாங்கு  தொம்,; -      தளாங்கு  தொம்,; - | தளாங்கு   தளாங்கு    | தொம்,;   -    தளாங்கு ||

    12   1   4             12   1  12   1     12   1   4              12   1        12  1
    தளாங்கு  தொம்,; -      தளாங்கு  தளாங்கு | தளாங்கு   தொம்,;  -   | தளாங்கு       தளாங்கு ||

    12   1   4             12   1  12   1     4          12   1       12   1        4
    தளாங்கு  தொம்,; -      தளாங்கு  தளாங்கு | தொம்,;  -  தளாங்கு    | தளாங்கு       தொம்,; - ||

    12   1   4             12   1   4         12   1  2        2      1  1  2        12  1
    தளாங்கு  தொம்,; -      தளாங்கு  தொம்,;- | *தளாங்கு  தோம் - தள   | , ங்கு தோம் - தளாங்கு ||
                                                                                     (தொம்)
```

* இக்குறி மோருவைக் குறிக்கும்.

## நான்கு ஆவர்த்தனங்கள் கொண்ட " தகஜிண ,, என்ற பயிற்சி.

ஆதி தாளம். அக்ஷரத்திற்கு " 4 " மாத்திரைகள்.

1\.
4 4 4 4 4 4 4 4
தகஜிண தொம்,; – தகஜிண தொம்,; – | தகஜிண தகஜிண | தொம்,; – தகஜிண ||

4 4 4 4 4 4 4 4
தகஜிண தொம்,; – தகஜிண தகஜிண | தகஜிண தொம்,; – | தகஜிண தகஜிண ||

4 4 4 4 4 4 4 4
தகஜிண தொம்,; – தகஜிண தகஜிண | தொம்,; – தகஜிண | தகஜிண தொம்,; – ||

4 4 4 4 4 2 2 2 2 4
தகஜிண தொம்,; – தகஜிண தொம்,; – | *தகஜிண தோம் – தக | ஜிண தோம் – தகஜிண ||
(தொம்)

குறிப்பு:– " தகஜிண " என்கிற சொல்லானது மிருதங்கத்திற்கு மிகவும் முக்கியமான சொற்களிலொன்று. பாட்டுகள் பாடும்பொழுதும், பாட்டில் சங்கதிகள் போடும்

பொழுதும், இந்த "தகஜிண" என்ற சொல்லை நன்ருகப் பிரயோசனப் படுத்துவ துடன், தனிமோருவாகவும் கொடுத்து ரஞ்சிக்கச் செய்யலாம்.

* இக் குறி மோருவைக் குறிக்கும்.

## பதினாறு ஆவர்த்தனங்கள் கொண்ட "பாடக்கோவை"

ஆதி தாளம். அக்ஷரத்திற்கு "8" மாத்திரைகள்.

4 4 4 2 2 4 4 4 2 2 4 4 4 2 2<br>
1. தா; – தரிகிட த,; கி, ட, – தா; – தரிகிட த,; கி, ட, –| தா; – தரிகிட த,; கி, ட, –

4 4 4 4<br>
| தா; – தரிகிட தா; – தரிகிட ||

4 4 4 2 2 4 4 4 2 2 4 4 4 2 2<br>
தீ; – தரிகிட தி,; கி, ட, – தீ; – தரிகிட தி,; கி, ட, –| தீ; – தரிகிட தி,; கி, ட, –

4 4 4 4<br>
| தீ; – தரிகிட தீ; – தரிகிட ||

4 4 4 2 2 4 4 4 2 2 4 4 4 2 2
தோம்; – தரிகிட தொம்,; கி, ட, – தோம்; – தரிகிட தொம்,; கி, ட, | தோம்; – தரிகிட தொம்,; கி, ட, –

4 4 4 4
| தோம்; – தரிகிட தோம்; – தரிகிட ||

4 4 4 2 2 4 4 4 2 2 4 4 4 2 2
நாம்; – தரிகிட நம்,; கி, ட, – நாம்; – தரிகிட நம்,; கி, ட, | நாம்; – தரிகிட நம்,; கி, ட, –

4 4 4 4
| நாம்; – தரிகிட நாம்; – தரிகிட ||

4 4 4 4 4 2 2 4 4 4 4 4 2 2
தா; – தரிகிட தா; – தரிகிட – த,; கி, ட, தா; – தரிகிட | தா; – தரிகிட த,; கி, ட, –

4 4 4 2 2
| தா; – தரிகிட த,; கி, ட, ||

4 4 4 4 4 2 2 4 4 | 4 4 4 2 2
தீ ; – தரிகிட தீ ; – தரிகிட – தி,; கி, ட, – தீ ; – தரிகிட | தீ ; – தரிகிட தி,; கி, ட, –

4 4 4 2 2
| தீ ; – தரிகிட தி,; கி, ட, ||

4 4 4 4 4 2 2 4 4 | 4 4 4 2 2
தோம்; - தரிகிட தோம்; - தரிகிட - தொம்,; கி, ட, - தோம்; - தரிகிட | தோம்; - தரிகிட தொம்,; கி, ட, –

4 4 4 2 2
| தோம்; – தரிகிட தொம்,; கி, ட, ||

4 4 4 4 4 2 2 4 4 | 4 4 4 2 2
நாம்; – தரிகிட நாம்; – தரிகிட – நம்,; கி, ட, – நாம்; – தரிகிட | நாம்; – தரிகிட நம்,; கி, ட, –

4 4 4 2 2
| நாம்; – தரிகிட நம்,; கி, ட, ||

4 4 4 2 2 | 4 4 4 2 2 | 4 4 4 4
தா; – தரிகிட த,; கி, ட, – தா; – தரிகிட த,; கி, ட, | தா; – தரிகிட தா; – தரிகிட –

4 2 2 4 4
| த,; கி, ட, – தீ; – தரிகிட ||

4 2 2 4 4 | 4 2 2 4 4 | 4 4 4 2 2
தி,; கி, ட, – தீ; – தரிகிட – தி,; கி, ட, – தீ; – தரிகிட | தீ; – தரிகிட தி,; கி, ட, –

4 4 4 2 2
| தோம்; – தரிகிட தொம்,; கி, ட, ||

4 4 4 2 2 4 4 4 4 | 4 2 2 4 4
தோம்; தரிகிட தொம்,; கி, ட, – தோம், – தரிகிட தோம்; – தரிகிட | தொம்,; கி, ட, – நாம்; – தரிகிட –

4 2 2 4 4
| நம்; கி, ட, – நாம்; – தரிகிட ||

4 2 2 4 4 4 4 4 2 2 4 4 4 4
நம்,; கி, ட, – நாம்; – தரிகிட – நாம்; – தரிகிட நம்,; கி, ட, – | தா; தரிகிட தா; – தரிகிட –

4 2 2 4 4
| த,; கி, ட, – தி; தரிகிட ||

4 4 4 2 2 4 4 4 4 4 2 2 4 4
தி; – தரிகிட தி,; கி, ட, – தோம்; – தரிகிட தோம்; – தரிகிட | தொம்,; கி, ட, – நாம்; – தரிகிட –

4 4 4 2 2
| நாம்; - தரிகிட நம்,; கி, ட, ||

4 4 4 2 2 4 4 4 2 2 4 4 4 2 2
தா; – தரிகிட த,; கி, ட, – தி; – தரிகிட தி,; கி, ட, – | தோம்; – தரிகிட தொம்,; கி, ட, –

4 4 4 2 2
| நாம்; – தரிகிட நம்,; கி, ட, ||

```
4   4        4   4        4        4        4       4       | 2    2  4       2    2  4
நா; - தரிகிட - இ; - தரிகிட - தோம்; - தரிகிட - நாம்; தரிகிட - | *தத் தா தரிகிட தத் தா தரிகிட —

                     8         2   2      4
                   | தோம்;;; — தத்தா    தரிகிட ||

2   2   4     8          2  2   4      2  2   4      | 2  2   4       4        2  2
தத் தா தரிகிட தோம்;;;  — தத்தா தரிகிட தத்தா தரிகிட | தத்தா தரிகிட தோம்; — தத்தா —

                     4      4       2   2   4
                   | தரிகிட தோம்; - தத் தா தரிகிட || (தோம்)
```

* இக்குறி மோருவைக் குறிக்கும்.

## முப்பத்தி ஆறு ஆவர்த்தனங்கள் கொண்ட "பாடக் கோவை"

ரூபக தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

| 2 | 2 | | 2 | 2 | 2 | 2 | | 2 | 2 | | 2 | 2 | 2 | 2 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தக் | கிட | = | தக | தக் | கிட் | டா | \| | தக் | கிட | = | தக | தக் | கிட் | டா | \|\| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | 2 | | 2 | 2 | | 2 | 2 | 2 | 2 | |
| தக் | கிட | = | தக | தக் | கிட் | டா | \| | தக் | கிட | = | தக | தக் | கிட் | டா | \|\| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | 2 | | 2 | 2 | | 2 | 2 | 2 | 2 | |
| திக் | கிட | = | தக | திக் | கிட் | டா | \| | திக் | கிட | = | தக | திக் | கிட் | டா | \|\| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | 2 | | 2 | 2 | | 2 | 2 | 2 | 2 | |
| திக் | கிட | = | தக | திக் | கிட | தக | \| | திக் | கிட | = | தக | திக் | கிட் | டா | \|\| |

2 2 = 2 2 2 2 | 2 2 = 2 2 2 2 ||
தொம், கிட = தக தொம், கிட் டா | தொம், கிட = தக தொம், கிட் டா ||

2 2 = 2 2 2 2 | 2 2 = 2 2 2 2 ||
தொம், கிட = தக தொம், கிட தக | தொம், கிட = தக தொம் கிட் டா ||

2 2 = 2 2 2 2 | 2 2 = 2 2 2 2 ||
நம், கிட = தக நம், கிட் டா | நம், கிட = தக நம், கிட் டா ||

2 2 = 2 2 2 2 | 2 2 = 2 2 2 2 ||
நம், கிட = தக நம், கிட தக | நம், கிட = தக நம், கிட் டா ||

2 2 = 2 2 2 2 | 2 2 = 2 2 2 2 ||
தக் கிட = தக தக் கிட தக | தக் கிட = தக தக் கிட் டா ||

2 2 = 2 2 2 2 | 2 2 = 2 2 2 2 ||
திக் கிட = தக திக் கிட தக | திக் கிட = தக திக் கிட் டா ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தொம், கிட = தக தொம், கிட தக | தொம், கிட = தக தொம், கிட் டா ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
நம்; கிட = தக நம், கிட தக | நம், கிட = தக நம், கிட் டா ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தக் கிட = தக தக் கிட் டா – | இக் கிட = தக இக் கிட் டா ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தொம், கிட = தக தொம், கிட் டா – | நம், கிட = தக நம், கிட் டா ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தக் கிட = தக - இக் - கிட தக – | தொம், கிட = தக - நம், கிட தக ||

2 2 2 2 2 2 2 2 2 2 2 2
தக் கிட = இக் கிட - தொம், கிட - | நம், கிட - = த, இ, தொம், நம், ||

```
  1  2  1          1  2  1   2      2    |   1  2  1          1  2  1   2      2
* த ளா ங்கு   =   த ளா ங்கு தோம் ; -   |   த ளா ங்கு   =   த ளா ங்கு தோம் ;     ||

  1  2  1          1  2  1    1  2  1     |   2          2       11  2      1  2  1
  த ளா ங்கு   =   த ளா ங்கு - த ளா ங்கு |   தோம் -  தள  =  , ங்கு தோம்- த ளாங்கு (தோம்) ||
```

குறிப்பு:- பாடக் கோவைகள், ஆரம்பத்திலிருந்து ஆவர்த்தனங்கள், குறைந்துகொண்டே வந்து மோருவுடன் பூர்த்தியாகிறது. இவை கோபுச்ச யதியைச் சார்ந்தனவாகும்.

* இக்குறி மோருவைக் குறிக்கும்.

## பதினாறு அட்சரங்கள் கொண்ட "சிறிய புரட்டல்கள்"

ஆதி தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

```
       4        4          4        4        |   4        4        |   4        4
1-2.   தக்,கிட   கிடதக      தகதரி    கிடதக -  |   திக்,கிட  கிடதக     |   தகதரி    கிடதக    ||
```

4 4 4 4 4 4 4 4
3-4. தொம்,கிட கிடதக தக்தரி கிடதக - | நம்,கிட கிடதக | தகதரி கிடதக ||

1 2 1 4 4 4 4 4 4 4
5-6. த ளாங்கு தரிகிட தகதரி கிடதக - | தக்,கும், தரிகிட | தகதரி கிடதக ||

2 2 2 2 4 4 2 2 2 2 4 4
7-8. தத் இத் தாங் கிட தகதரி கிடதக - | தக இத் தா கிட | தகதரி கிடதக ||

## பன்னிரண்டு அட்சரங்கள் கொண்ட சிறிய "புரட்டல்கள்"

ரூபக தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

4 4 4 4 4 4
1-2. தக், கிட = கிட தக தரி கிட | இக், கிட = கிட தக தரி கிட ||

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 4 | | 4 | 4 | | 4 | | 4 | 4 | |
| 3-4. | தொம், கிட | = | கிட தக | தரி கிட - | \| | நம், கிட | = | கிட தக | தரி கிட | ‖ |
| | 1 2 1 | | 2 2 | 4 | | 2 2 | | 4 | 4 | |
| 5-6. | த ளா ங்கு | = | தொம், தரி | கிட தக - | \| | தாங் கிட | = | தக், கும், | தரிகிட | ‖ |
| | 2 2 | | 4 | 4 | | 2 2 | | 4 | 4 | |
| 7-8. | தாங் கிட | = | தக தரி | கிட தக - | \| | தீங் கிட | = | தக தரி | கிட தக | ‖ |

## முப்பத்திரண்டு அட்சரங்கள் கொண்ட பெரிய "புரட்டல்கள்"

ஆதி தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 4 | 4 | 4 | 4 | | 4 | 4 | | 4 | 4 | |
| 1. | தக், கிட | கிட தக | தக், கிட | கிட தக | \| | தக், கிட | கிட தக | \| | தக தரி | கிட தக | ‖ |

4 4 4 4 | 4 4 | 4 4
2. திக், கிட கிட தக திக், கிட கிட தக | திக், கிட கிட தக | தக தரி கிட தக ||

2 2 4 2 2 4 | 2 2 4 | 4 4
3. தொம், கிட கிட தக தொம், கிட கிட தக | தொம், கிட கிட தக | தக தரி கிட தக ||

2 2 4 2 2 4 | 2 2 4 | 4 4
4. நம், கிட கிட தக நம், கிட கிட தக | நம், கிட கிட தக | தக தரி கிட தக ||

1 2 1 4 1 2 1 4 | 1 2 1 4 | 4 4
5. த ளா ங்கு தரி கிட த ளா ங்கு தரி கிட | த ளா ங்கு தரி கிட | தக தரி கிட தக ||

4 4 4 4 | 4 4 | 4 4
6. தக்,கும், தரிகிட தக்,கும், தரி கிட | தக்,கும், தரிகிட | தக தரி கிட தக ||

2 2 2 2 2 2 2 2 | 2 2 2 2 | 4 4
7. தத் தித் தாங் கிட தத் தித் தாங் கிட | தத் தித் தாங் கிட | தக தரி கிட தக ||

| | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | | 2 | 2 | 4 | 2 | | 2 | 4 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 8. | தக | இத் | தாங் | கிட | தக | இத் | தாங் | கிட | \| | தக | இத் | தாங் | கிட | \| | தக தரி | கிட தக | ‖ |

## இருபத்தி நான்கு அட்சரங்கள் கொண்ட பெரிய "புரட்டல்கள்"

ரூபக தாளம், அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

| | 4 | | 4 | 4 | | 4 | | 4 | 4 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | தக், கிட | = | கிட தக | தக தரி | \| | கிட தக | = | தக தரி | கிட தக | |
| | 4 | | 4 | 4 | | 4 | | 4 | 4 | |
| 2. | இக், கிட | = | கிட தக | தக தரி | \| | கிட தக | = | தக தரி | கிட தக | ‖ |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 2 2 | | 4 | 4 | | 4 | | 4 | 4 | |
| 3. | தொம், கிட | = | கிட தக | தக தரி | । | கிட தக | = | தக தரி | கிட தக | ॥ |
| | 4 | | 4 | 4 | | 4 | | 4 | 4 | |
| 4. | நம், கிட | = | கிட தக | தக தரி | । | கிட தக | = | தக தரி | கிட தக | ॥ |
| | 1 2 1 | | 4 | 4 | | 4 | | 4 | 4 | |
| 5. | த ளா ங்கு | = | தரி கிட | தக தரி | । | கிட தக | = | தக தரி | கிட தக | ॥ |
| | 4 | | 4 | 4 | | 4 | | 4 | 4 | |
| 6. | தக்,கும், | = | தரி கிட | தக தரி | । | கிட தக | = | தக தரி | கிட தக | ॥ |
| | 2 2 | | 2 2 | 4 | | 4 | | 4 | 4 | |
| 7. | தத் தித் | = | தாங் கிட | தக தரி | । | கிட தக | = | தக தரி | கிட தக | ॥ |
| | 2 2 | | 2 2 | 4 | | 4 | | 4 | 4 | |
| 8. | தக தித் | = | தாங் கிட | தக தரி | । | கிட தக | = | தக தரி | கிட தக | ॥ |

குறிப்பு:— புரட்டல் என்பதற்கு "உருட்டல்" என்றும், "பரன்" என்றும் பெயர்கள் உண்டு. இந் நூலில் இது புரட்டல் என்றே கூறப்பட்டுள்ளது. இது மிருதங்க வாத்தியத்திற்கு மிகவும் முக்கியமானது. பாட்டுகளில் வரும் பலவிதமான சங்கதிகளுக்கு உதவியாயும், பாடகர்களை உற்சாகத்துடன் பாடும்படி தூண்டுவதாயும் இருப்பதால், இப்புரட்டல்கள் மிருதங்கம் வாசிப்பவர் கையில் நன்ருகப் பேசப்படவேண்டும்.

---

## அலங்கார முறைப்படி, ஏழு தாளங்களுக்கு வாயால் சொல்லும் சொற்கள்.

1. சதுச்ர ஜாதி. துருவ தாளம், 14-அக்ஷரங்கள்.

| | \| | 0 | \| | \| |
|---|---|---|---|---|
| 1. | த க தி மி \| | த க \| | த க தி மி \| | த க ஜ ணு \|\| |
| 2. | திங் கி ண தொம் \| | கி ட \| | த கி ட த \| | திங் கி ண தொம் \|\| |

---

2. சதுச்ர ஜாதி. மட்டிய தாளம். 10-அக்ஷரங்கள்.

```
           |                0                |
1.   த  த  ஜ  ணு  |   த  க   |   த  க  ஜ  ணு   ||
2.   கி  ட  த  க   |   தி  மி  |   தி  மி  கி  ட   ||
```

3. சதுச்ர ஜாதி. ரூபக தாளம். 6-அக்ஷரங்கள்.

```
          0              |
1.      தி  மி  |  த  த  தி  மி  ||
2.      கி  ட   |  த  ரி  கி  ட   ||
```

4. மிச்ர ஜாதி. ஜம்பை தாளம், 10-அக்ஷரங்கள்.

|  | I | ◡ | 0 |  |
|---|---|---|---|---|
| 1. | த கி ட த க தி மி | கி | ட தொம் | ‖ |
| 2. | த க த திங் கி ண தொம் | கி | ண தொம் | ‖ |

---

5. திச்ர ஜாதி. திருபுடை தாளம், 7-அக்ஷரங்கள்.

|  | I | 0 | 0 |  |
|---|---|---|---|---|
| 1. | த கி ட | த க | தி மி | ‖ |
| 2. | த தி மி | கி ட | ஜ ணு | ‖ |

---

6. கண்ட ஜாதி. அட தாளம். 14-அக்ஷரங்கள்.

| | | 0 | 0 | |
|---|---|---|---|---|
| 1. | த க த கி ட | த திங் கி ண தொம் | திங் கி | ண தொம் ‖ |
| 2. | த , த ஜ ணு | த க த தி மி | கி ட | த க ‖ |

---

7. சதுச்ர ஜாதி. ஏக தாளம். 4-அக்ஷரங்கள்.

1. த த ஜ ணு ‖

2. கி ட த க ‖

---

குறிப்பு:— ஏழு தாளங்களுக்கு தத்தகார முறையில் சொல் எழுதியிருப்பதை அந்தந்த தாள அங்கங்களிற் கேற்ப சொற்களை **வாயால்** அலங்கார முறைப்படி, மூன்று காலங்களில் சொன்னால் ஏழு தாள விபரங்களும், சீக்கிரம் தெரிவதுடன், தாளம் கையில் நிலைத்துப் போடவும் அனுகூலமாயிருக்கும்.

## ½ ஆவர்த்தன "மோருக்கள்"

ஆதி தாளம். அக்ஷரத்திற்கு "4" மாத்திரைகள்.

1.
```
2 2 2 2 2 2 2 2   2          2         2           2        2        2         2          2
; ; ; ; ; ; ; ; | தகதரி கிடதக தோம் - தகதரி | கிடதக தோம் - தகதரி கிட,தக || (தொம்).
```

2.
```
2 2 2 2 2 2 2 2   2              2         2          2        2        2         2          2
; ; ; ; ; ; ; ; | தளாங்குதிந்,தத்,தோம்-தளாங்கு | திந்,தத்,தோம்- தளாங்குதிந்,தத், || (தொம்).
```

3.
```
2 2 2 2 2 2 2 2   1 2       1      2        1        1    1 1        2        1        2        1
; ; ; ; ; ; ; ; | தித்,தளாங்குதொம்,-தளாங்குதொம்,-தளா | ,ங்குதொம்,-தளாங்குதொம்,-தளாங்கு தொம்,-|| (தா).
```

| 3 | 1 | | 2 | 3 | 1 | |
|---|---|---|---|---|---|---|
| †தா , - | தரி | = | கிட தக | தா , - | தரி | \| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | |
| கிட தக | †திங் , கிண | = | கிட தக | தக தரி | கிட தக | \| |
| 3 | 1 | | 2 | 3 | 1 | |
| தா , - | தரி | = | கிட தக | தா , - | தரி | \| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | |
| கிட தக | †த திங் கிண | = | கிட தக | தக தரி | கிட தக | \| |
| 3 | 1 | | 2 | 3 | 1 | |
| தா , - | தரி | = | கிட தக | தா , - | தரி | \| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | |
| கிட தக | †தக திரி | = | தக ஜிணு | தக தரி | கிட தக | \| |

| 3 | 1 | | 2 | 3 | 1 | |
|---|---|---|---|---|---|---|
| தா , - | தரி | = | கிடதக | தா , - | தரி | \| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | |
| கிடதக | †தரிகிட | = | கிடதக | தகதரி | கிடதக | \| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | |
| தா | தரிகிட | = | கிடதக | தரிகிட | கிடதக | \| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | |
| தரிகிட | கிடதக | = | தரிகிட | கிடதக் , | கிடதக | \| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | |
| †தளாங்கு | தொம் , தரி | = | கிடதக | தகதரி | கிடதக | \| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | |
| தாங்கிட | தக் , கும் , | = | கிடதக | தகதரி | கிடதக | \| |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 2 | 2 | | = | 2 | 2 | 2 | \| |
| தாங்கிட | தகதரி | | | கிடதக | தகதரி | கிடதக | |
| 2 | 2 | | = | 2 | 2 | 2 | \| |
| கிங்கிட | தகதரி | | | கிடதக | தகதரி | கிடதக | |
| 3 | 1 | | = | 2 | 2 | 2 | \| |
| தாங்கிடதக | தாங் | | | கிடதக | தகதரி | கிடதக | |
| 3 | 1 | | = | 2 | 2 | 2 | \| |
| தரிகிடதக | தரி | | | கிடதக | தகதரி | கிடதக | |
| 2 | 1 | 1 | == | 1 3 | 1 | 1 | \| |
| * தரிகிட | தொம் | த | | , - தகதரிகிட | தொம் | த | |
| 1 2 | 1 | | = | 1 1 | 2 | 2 | \| |
| , - கிடதக | தரி | | | கிட தொம் | தாங்கிட | தகதரி | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 2 | 2 | | = | 2 | 2 | 2 | | |
| கிடதக | தளாங்கு | | = | இங், தக், | தளாங்கு | தோம் | | \| |
| 2 | 1 | 1 | = | 1 | 3 | 1 | 1 | |
| தரிகிட | தொம் | த | = | , - | தகதரிகிட | தொம் | த | \| |
| 1 | 2 | 1 | = | 1 | 1 | 2 | 2 | |
| , - | கிடதக | தரி | = | கிட | தொம் | தாங்கிட | தகதரி | \| |
| 2 | 2 | | = | 2 | 2 | 2 | | |
| கிடதக | தளாங்கு | | = | இங், தக், | தளாங்கு | தோம் | | \| |
| 2 | 1 | 1 | = | 1 | 3 | 1 | 1 | |
| தரிகிட | தொம் | த | = | , - | தகதரிகிட | தொம் | த | \| |
| 1 | 2 | 1 | = | 1 | 1 | 2 | 2 | |
| , - | கிடதக | தரி | = | கிட | தொம் | தாங்கிட | தகதரி | \| |

2 2 = 2 2 2
கிடதக தளாங்கு = ௳தாம் , - தாங்கிட தகதரி |

2 2 = 2 2 2
கிடதக தளாங்கு = ௳தாம் , - தளாங்கு தகதரி |

2 2 = 2 3 1
கிடதக தளாங்கு = திங் , தத் , தோம் , - தள |

1 2 1 = 2 2 2
, ங்கு திங் , தத் , ௳தாம் = ; - தளாங்கு திங் , தத் , |

3 1 = 2 3 1
தரிங் கி = ணதோம் தரிங் கி |

2 2 = 4 2
ணதோம் தி = , ங்கிணதோம் தா |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | | 3 | 3 | | | |
| , - | தஇங் | = | கிணதொம் | தஇங் | | | \| |
| 3 | 1 | | 5 | 1 | | | |
| கிணதொம் | த | = | திங்கிணதொம் | த | | | \| |
| 2 | 2 | | 3 | 1 | 2 | | |
| ; - | ததி | = | , ங்கிண | தொம் | ததி | | \| |
| 3 | 1 | | 3 | 3 | | | |
| , ங்கிண | தொம் | = | தஇங் | கிணதொம் | | | \| |
| 2 | 2 | | 2 | 2 | 2 | | |
| (தாங் | இட | = | தக | தின் , | ஞ | | \| |
| 2 | 2 | | 1 | 2 | 1 | 2 | |
| ; - | தகஜிண | = | தொம் | தகஜிண | தொம் | தகஜிண) | \|\| (தொம்) |

# சாதிகள் மாற்றும் விதம்

## சதுச்சிரசாதித் திரிபுடையாகிய ஆதிதாளத்தில் 'திசிரசாதி'' யை மாற்றும் விதம்

அட்சரத்திற்கு "3" மாத்திரைகள்.

3 3 3 3 | 3 3 | 3 3
தகதின் திகிட தகதின் தகதின் | தகதின் தகிட | தகதின் தகிட ||

3 3 2 3 | 2 4 | 1 4 1
தகிட தகிட தகிட ததிங்கி | ணதொம் ததிங்கிண | தொம் ததிங்கிண தொம் ||

3 3 3 3 | 3 3 | 3 2 1
தகதின் தகிட தகதின் தகிட | தகதின் தகிட | ததீங் கிண தொம் ||

2 1 3 3 3 | 2 1 3 | 3 2 1
தாங்கிட தின் ததின தகதின் ததின | தாங்கிட தின் ததின | ததீங் கிண தொம் ||

3 3 3 3 3 2 1 3 2 1
தகதின் தகிட தகதின் தகிட | ததீங் கிண தொம் | ததீங் கிண தொம் ||

3 2 1 3 3 3 3 3 2 1
* ததீங் கிண தொம் தா , - ததீங் | கிணதொம் தா , - | ததீங் கிண தொம் ||

2 1 3 2 1 3 2 1 3 2 2 2
தரிகிட தின் ததிமி தரிகிட தின் தகிட | தரிகிட தின் ததிமி | தாங்கிட தகதரி கிடதக ||

2 1 2 1 2 1 3 2 1 3 2 2 2
தரிகிட தின் தரிகிட தின் தரிகிட தின் ததிமி | தரிகிட தின் தகிட | தாங்கிட தகதரி கிடதக ||

2 1 3 2 2 2 2 1 3 2 2 2
தரிகிட தின் தகிட தாங்கிட தகதரி கிடதக | தரிகிட தின் ததிமி | தாங்கிட தகதரி கிடதக ||

2 2 2 3 3 3 3 2 2 2
* தாங்கிட தகதரி கிடதக தோம் , - தாங்கிடதக | தரிகிடதக தோம் , - | தாங்கிட தகதரி கிடதக ||

3 3 3 3 | 4 2 | 2 2 2
தகிட தகிட தகிட தகிட | தகதிமி †தகஜிண . | தகஜிண தகதரி கிடதக ||

3 3 3 3 | 4 2 | 2 2 2
தகிட தகிமி தகிமி தகிட | தகதிமி †தரிகிட | கிடதக தகதரி கிடதக ||

2 2 2 2 2 2 | 2 2 2 | 2 2 2
†தகஜிண தகஜிண தகதரி கிடதக தகதரி கிடதக | தரிகிட கிடதக தகதரி | கிடதக தகதரி கிடதக ||

2 2 2 2 2 2 | 2 2 2 | 2 2 2
தகஜிண தகஜிண தகதரி கிடதக *தகஜிண தகஜிண | தோம் - தகஜிண தகஜிண | தோம் - தகஜிண தகஜிண ||

(டுதாம்)

## சதுச்சிரசாதித் திரிபுடையாகிய ஆதிதாளத்தில் "கண்டசாதி" யை மாற்றும் விதம்

அட்சரத்திற்கு "5" மாத்திரைகள்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 5 | 5 | | 5 | 5 | | |
| தகதகிட | தகதகிட | | தகதகிட | ததிங்கிணதொம் | | \| |
| 5 | 5 | | 5 | 5 | | |
| தகதகிட | தகதகிட | \| | தகதகிட | ததிங்கிணதொம் | | \|\| |
| 5 | 5 | | 5 | 5 | | |
| தகதகிட | ததிங்கிணதொம் | | தகதகிட | ததிங்கிணதொம் | | \| |
| 5 | 2 3 | | 2 | 3 | 5 | |
| *ததிங்கிணதொம் | தா - ததிங்கி | \| | ணதொம் | தா , - | ததிங்கிணதொம் | \|\| |

5 5 | 5 5
இன் , தஇன் , தகதகிட | இன் , தஇன் , தகதகிட |

5 5 | 3 2 5
இன் , தஇன் , தகதகிட | தா , - தக - தஇங்கிணதொம் ||

5 5 | 5 5
இன் , தஇன் , தகதகிட | இன் , தஇன் , தகதகிட |

5 5 | 3 4 3
இன் , தஇன் , இன் , தஇன் , | தா , - தத் , இங் , - கிணதொம் ||

5 5 | 3 2 5
இன் , தஇன் , தகதகிட | தா , - தக - தஇங்கிணதொம் |

5 5 | 3 4 3
இன் , தஇன் , தகதகிட | தா , - தத் , இங் , - கிணதொம் ||

5 5 3 4 3
தகதகிட தகதகிட தா , - *தத் , திங் , - கிணதொம் |

3 4 3 3 4 3
தா , - தத் , திங் , - கிணதொம் | தா , - தத் , திங் , - கிணதொம் ||

5 5 5 5
தின் , ததின் , தகதகிட தகததின் , தகதகிட |

5 5 5 5
தின் , ததின் , தகதகிட | தகததின் , - கிடதகதரிகிட தொம் ||

5 5 5 5
தின் , ததின் , தகதகிட தகததின் தகதகிட |

5 5 5 5
தின் , ததின் , தகதகிட | தகததின் , - கிடதகதரிகிட தொம் ||

| 5 | 5 | 5 | 5 | |
|---|---|---|---|---|
| தின் , ததின் , தகதகிட | | தகததின் | கிடதக்தரிகிட தொம் | \| |
| 5 | 5 | 5 | 5 | |
| தகததின் , | தகதகிட \| | தின் , ததின் , | கிடதகதரிகிட தொம் | \|\| |
| 5 | 5 | 5 | 5 | |
| *கிடதகதரிகிட தொம் | கிடதகதரிகிட தொம் | தா ; , - | கிடதகதரிகிட தொம் | \| |
| 5 | 5 | 5 | 5 | |
| கிடதகதரிகிட தொம் | தா ; , - \| | கிடதகதரிகிட தொம் | கிடதகதரிகிட தொம் | \|\| (தா) |

## சதுச்சிர சாதித் திரிபுடையாகிய ஆதிதாளத்தில் "மிசிர சாதியை" மாற்றும் விதம்

அட்சரத்திற்கு "7" மாத்திரைகள்

| 7 | 7 | | 7 | 7 | | |
|---|---|---|---|---|---|---|
| தத் , திமி தகிட | தத் , திமி தகிட | | தத் , திமி தகிட | தகதிமி தகிட | | \| |
| 7 | 7 | | 7 | 2 | 5 | |
| தத் , திமி தகிட | தத் , திமி தகிட | \| | தத் , திமி தகிட | ; | தகிங்கிணதொம் | \|\| |
| 7 | 7 | | 7 | 7 | | |
| தத் , திமி தகிட | தத் , திமி தகிட | | தத் , திமி தகிட | தகதிமி தகிட | | \| |
| 7 | 7 | | 7 | 2 | 5 | |
| தத் , திமி தகிட | தத் , திமி தகிட | \| | தகதிமி தகிட | ; - | தகிங்கிணதொம் | \|\| |
| 7 | 7 | | 7 | 2 | 5 | |
| தத் , திமி தகிட | தத் , திமி தகிட | | தத் , திமி தகிட | ; - | தகிங்கிணதொம் | \| |

7 7 7 2 5
தகதிமி தகிட  தகதிமி தகிட | தகதிமி தகிட ; - ததிங்கிணதொம் ||

7 2 5 7 2 5
தத் , திமி தகிட ; - ததிங்கிணதொம் தக திமி தகிட ; - ததிங்கிணதொம் |

7 5 2 5 4 5
தகதிமி தகிட ததிங்கிணதொம் தக | ததிங்கிணதொம் தகதிமி ததிங்கிணதொம் ||

7 7 7 7
தகிட தகதிமி தகிட தகதிமி  தகிட தகதிமி தகிட தகதிமி |

7 7 7 7
தகிட தகதிமி தகிட தகதிமி | தகிட தகதிமி - தக்ததிங்கிணதொம் ||

7 7 7 7
தகதிமி தகிட தகதிமி தகிட  தகதிமி தகிட தகதிமி தகிட |

7 7 | 7 7
தகதிமி தகிட தகதிமி தகிட | தகதிமி தகிட - தகததிங்கிணதொம் ||

7 7 | 7 7
தகிட தகதிமி தகிட தகதிமி | தகிட தகதிமி தகததிங்கிணதொம் |

7 7 | 7 7
தகதிமி தகிட தகதிமி தகிட | தகதிமி தகிட தகததிங்கிணதொம் ||

7 7 | 7 7
* தகததிங்கிணதொம் தகததிங்கிணதொம் | தா , ; ; - தகததிங்கிணதொம் |

7 7 | 7 7
தகததிங்கிணதொம் தா , ; ; - | தகத்திங்கிணதொம் தகததிங்கிணதொம் || (தா)

## சதுச்சிர சாதித் திரிபுடையாகிய ஆதிதாளத்தில் "சங்கீர்ண சாதி"யை மாற்றும் விதம்

அட்சரத்திற்கு "9" மாத்திரைகள்,

9 9 9 9
தரகிட தகதகிட ததகிட தகதகிட ததகிட தகதகிட ததகிட தகதகிட |

9 9 9 9
தத், தகிட தகதிமி தத், தகிட தகதிமி | தத், தகிட ததகிட - தகதிகு ததிங்கிணதோம் ||

9 9 9 9
தகதிமி தகதகிட தகதிமி தகதகிட தகதகிட தகதிமி தத், தகிட ததகிட |

9 9 9 9
தகதிமி தத், தகிட தகதிமி தகதகிட | தகதிமி தகதகிட - தகதிகு ததிங்கிணதோம் ||

9 9 9 9
தத், திமி தகததிமி தத், திமி தகததிமி தத், திமி தகதகிட தகதிகு ததிங்கிணதோம் |

9 9 9 9
தத் , திமி நகதகிட தகதிமி தகதகிட | தத் , திமி நகதகிட - தகதிகு ததிங்கிணதொம் ||

9 9 9 9
* தகதிகு. ததிங்கிணதொம் தகதிகு ததிங்கிணதொம் தா , ; ; ; - தகதிகு ததிங்கிணதொம் |

9 9 9 9
தகதிகு ததிங்கிணதொம் தா , ; ; ; . | தகதிகுததிங்கிணதொம் தகதிகுததிங்கிணதொம் || (தா)

உ

# மிருதங்கம்
# 4-வது வகுப்பு இலக்கணம்.

---

## கைத்தாளப்பிடி விபரம்.

சதுச்சிர - துருவ் தாளம். 14 அட்சரம் உள்ளது. ஒரு லகு திருதமும் இரண்டு லகுவுங் கொண்டது. அதன் அடையாளம் (Q ||)

திசிர - துருவ தாளம். 11 அட்சரம் உள்ளது.

ஒரு திருதவிராமமும், ஒரு திருதமும், இரண்டு திருத விராமமும் கொண்டது. அதன் அடையாளம் (8o88). இந்த அங்கங்களின் பிரகாரம் தட்டுக்களை மட்டும் தட்டிக் கார்வைகளை உள்ளடக்கிப் போடுவதேயாகும்.

## நவசந்திகளின் விபரம்.

புராதனமான கோயில்களிலும், விதிப்படி ஆராதனை பூசை வகையருக்கள் நடத்திவரும் பிறகோயில்களிலும் ஒன்பது இடங்களில் பலிபீடங்களில் நவசந்தித் தெய்வங் களை மந்திர பூர்வமாக ஸ்தாபனம் செய்திருப்பார்கள். அத்தெய்வங்களுக்கு நித்தியப்படி பூசைகள் நடத்துவ துடன், உற்சவ காலங்களில் முன்னாடியே காப்புக்கட்டி, மேற்படி ஒன்பது இடங்களிலும் வெவ்வேறு மந்திரங் களுடன், பூசை நிவேதனஞ் செய்து அந்தந்தத் தேவதை களுக்குள்ள இராகம், தாளம், பண் இவைகளுடன் பாடி வாத்தியங்கள் வாசிப்பது வழக்கம். அத்தெய்வங்களின், பெயர்கள் முறையே இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், பிரமன் என்பனவாம். இத்தெய்வங்களுக்குத்தனித்தனிகவுத்துவங்களும் உண்டு.

## பல்லவி.

பல்லவி என்பதற்கு பத, லய, விந்நியாசம் என்பதி பொருள். அதாவது குறைந்த எழுத்துக்களைத் தாளத் தில் அமைத்து லயம் தவறாது விந்நியாசம், கற்பனை செய்து பாடுவதேயாகும். சங்கீதக் கலையில் தேர்ச்சி பெற்ற ஒருவித்துவான் அடைந்திருக்கும் ஞானபலத்தின் திறமை யைக் காட்டுவதே பல்லவியாகும்.

## பல்லவி அமைப்பு.

பல்லவி அமைக்கப்படும் தாளமானது, சித்திரதர மார்க்க கால அளவிற்குக் குறையாமல் இருத்தல் வேண்டும். குறைந்த பத அட்சரங்களை இராக பாவத்துடன் கூடிய வர்ணமெட்டில் அமைத்தல்வேண்டும். இன்னமும் எடுப்பு அறுதி முடிவு என்று மூன்று அம்சங்கள் உண்டு.

**எடுப்பு** என்பது பல்லவிக்காக அமைக்கப்படும் பதங்களைத் தாளம் போட்டு முதலாவதாக ஆரம்பித்தல்.

**அறுதி** என்பது அவ்வாறு எடுத்த பதங்களை லோபமில்லாது தாள பூர்வாங்க முடிவில் வரும் தட்டில் சேர்ப்பித்தல்.

**முடிவு** என்பது தாள உத்தராங்கத்தில் பாடி முடித்தல். இன்னமும் எந்த இராகத்தின் சுரத்தானத்தில் பல்லவி ஆரம்பிக்கப் படுகிறதோ அந்த இராகத்தின் அம்சம் பொருந்திய சுரத்தில் அறுதி இருத்தல் வேண்டும். பின்பு பாடி முடிக்கும் சுரமானது ஆரம்பித்த சுரத்திற்குக் கீழ்ச்சுரமாகவாயினும் மேல்சுரமாகவாயினும் இராகத்திற்குத் தக்கபடி அமைந்திருத்தல் வேண்டும். பிறகு பல்லவி அமைந்து நிற்கும் எழுத்துக்களை அகார, இகார, உகாரங்களைக் கொடுத்து நிரவல் செய்து பாடவேண்டும். தாளத்தின் பிற்பாகத்திலிருந்து சவுக்க கால சுரம பல மாதிரியில் இராக பாவத்துடன் பாடி, பிறகு மத்திமகால சுரமும், துரிதகால சுரமும் தனித்தனியே பல முறைகள் பாடிவர வேண்டும். பின் மத்திம காலம், துரிதகாலம், இரண்டும் கலந்தமுறையில் சுரங்களை, வல்லினம், மெல்லினங்களோடு பாட வேண்டும். பிறகு பல்லவியை இரண்டாங்காலம் பாடவேண்டும். இவ்விடத்தில் பல்லவியைப் பல இராகங்களில் இராக மாலிகையாகவும் மாற்றிப் பாடுவதுண்டு. பிறகு பல்லவியை மூன்றுங்காலம் பாடவேண்டும்.

## அனுலோமம்.

தாளம் முதற்காலம் போட்டுக் கொண்டு சவுக்க, மத்திம, துரித காலங்களாகக் கணக்குப்படி பாடுவது அல்லது வாசிப்பது அனுலோமம் எனப்படும்.

## பிரதிலோமம்.

தாளம் மூன்றுங்காலம் போட்டுக்கொண்டு துரித, மத்திம, சவுக்க காலங்களாகக் கணக்குப்படி பாடுவது அல்லது வாசிப்பது பிரதிலோமம். இதில் அறுதி சமத்

தில் வந்து விழும்படியாகவேயிருக்கும். இது கருநாடக முறை.

தாளம் சவுக்க காலத்தில் இருக்க, பல்லவி எடுப்பி லிருந்தே ச்வுக்க, மத்திம, துரித காலங்களாகப் பாடு வதுமுண்டு. இது நவீன முறை. இது திரிகாலப் பல்லவி என்றும் சொல்லப்படும். இதற்கு அறுதி சமத்தில் விழாது. எடுப்புப் பிரதானம். தாளச் செய்கைகளில் இதுவும் ஒன்று.

## 22. சுருதிகளின் விபரம்.

இரத்தினகரம், பாரிஜாதம் முதலிய நூல்களில் இரு பத்திரண்டு சுருதிகளின் விபரம் நன்ருய்க் கூறப்பட்டிருக் கின்றது. அது பின்வருமாறு. ச-ப-ச்வின் பாடம் முதலில் கற்பிக்கப்படுகின்றதல்லவா? அதில் வரும் முதல் ச-தாழ்ந்து ஒலிக்கின்றது. பின்னல் வரும் ச-உயர்ந்து ஒலிக்கின்றது. இந்த இரண்டு ச-விற்கும் இடையிலுள்ள இடைவெளியை 22 பாகங்களாகப் பகுப்போமாகில் ப–விற்கு மேலே 9 பகுதிகள் வருகின்றன. ப-விற்கு கீழே 13 பகுதிகள் வருகின்றன. முதல் ச–விலிருந்து கவனிக்கும்போது ச-விற்குப் பிறகு மூன்ருவதில் ரி-யும் பிறகு இரண்டாவதில் க-வும், பிறகு நான்காவதில் ம-வும், பின்பு நான்கில் ப-வும், பின்பு மூன்றில் த-வும், பின்பு இரண்டில் நி-யும், அதன் பின்பு நான்கில் மேல் ச-வும் வருகின்றன. மேற்கூறிய ஏழு ஸ்தானங்களும் சுத்த ஸ்தானங்கள் எனப்படும். நமது கருநாடக சங்கீதத் தில் இந்த ஸ்தானங்கள் 'கரகரப்பிரியாவைக் குறிக்கின் றன. சாம கானத்தை ஒருவர் பாடும்போது கேட்டால் அதன் ஸ்தானங்கள் கரகரப்பிரியாவில் சேர்ந்தன என்பது இன்றைக்கும் அறியப்படும். இதனல் ச-ம-ப- இவற் றிற்கு நான்கு நான்கு சுருதிகள் என்பதும், ரி-த- இவற் றிற்கு மும்மூன்று சுருதிகள் என்பதும், க-நி- இவற் றிற்கு இரண்டு இரண்டு சுருதிகள் என்பதும், ஆக சுருதி கள் 22 என்பதும் நன்கு விளங்கும்.

கரகரப்பிரியாவின் ஸ்தானங்களுக்கு ஷட்ஜம், சது சுருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்த மத்திமம், பஞ்சமம், சதுசுருதிதைவதம், கைசிகிநிஷாதம் என்ற பெயர்கள் தென்னிந்தியாவில் வழங்குகின்றன. ச-விற் குப் பிறகு மூன்ருவது சுருதி என்பதை சதுசுருதி என்ற பெயர் விளக்குகின்றது. சாதாரண காந்தாரம் என்பது ஷட் சுருதியின் ஸ்தானம் என்று கூறப்பட்டிருப்பதாலும் ஷட் சுருதி என்பது ஆருவது சுருதி என்று பொருள்படுவ

தாலும் சதுசுருதி ரிஷபத்திற்குப் பிறகு கரகரப்பிரியாவில் வரும் சாதாரண காந்தாரமானது இரண்டு சுருதிகளில் அடங்கி வருகிறதென்பதும் நன்கு பிரகாசமாகும். இதைப்போலவே ப - விலிருந்து நாலாவது சுருதியிலும், ஆருவது சுருதியிலும், சதுசுருதிதைவதமும் (ஷட் சுருதி ஸ்தானத்தை யுணர்த்தும்) கைசிகிநிஷாதமும் முறையே வருகின்றனவென்பதும் அறியத்தக்கன.

## மிருதங்க ஆசிரியர்களின் வரலாறு.

### நாராயணசாமி அப்பா

மிருதங்கம் நாராயணசாமி அப்பா என்பவர் சாதியில் பிராமணரல்லாதவர். அவருடைய சொந்த ஊர் தஞ்சை. அவர் காலமாகிச் சுமார் 40 வருடங்களுக்குமேல் ஆகின்றன. அவருடைய குரு சிவசாமி அப்பா என்பவர். அவ்வளவு பிரபலமாக வெளியில் கியாதியில்லாதவர். நாராயணசாமி அப்பாவின் மிருதங்க வாசிப்பு மிகவும் அபாரமாயிருக்கும். அதில் முக்கிய விசேடம் என்னவென்ருல், மிருதங்கத்தைப்பற்றிய உண்மையான பூரண நாதம், காலப்பிரமாணசுத்தம், சுருதி ஞானம், நாதத்தோடு கூடிய கையில் நல்ல பேச்சுகள் என்பவையெல்லாம் உண்டு. இவற்றுடன் நல்ல மனே தர்மமும் இருந்ததனல் அவரால் பல சீர்திருத்தங்கள் ஏற்பட்டன. அதாவது பழைய காலத்தில் மிருதங்கத்திற்கும் அதை வாசிப்பவர்களுக்கும் விசேட பிரபலத்துவம் கொடாமல் ஏதோ பக்கவாத்தியமென்று சாதாரணமாக எண்ணிவந்தார்கள். நாராயணசாமி அப்பாவின் வாசிப்பிலிருந்து மிருதங்கம் ஒரு தேவவாத்தியமென்றும், அது நாதத்தை பிரதானமாகக் கொண்டது என்றும் தெரிந்து அன்றுதொட்டு மிருதங்கக்காரர்களுக்குப் பாடகர்களோடு சமவுரிமை கொடுக்க ஆரம்பித்தார்கள். அதற்குமுன் கச்சேரிகளில் மிருதங்கக்காரர்கள் பாடகர்களுக்குப் பின்புறத்தில் உட்கார்ந்துகொண்டும் கதைகளில் நின்றுகொண்டும் வாசித்துவந்தார்களென்று தெரியவருகிறது. இவரால் மிருதங்கக்காரர்களுக்குக் கச்சேரிகளில் சமமான இடமும் கதைகளில் பெஞ்சியின்மேலிருப்பும் கிடைத்தன என்ருல் அவருடைய வாசிப்பின் மேன்மையைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? அல்லாமலும் அவர் வாசிக்கும்போது தலையாவது உடம்பாவது அசைவதில்லை. முழங்கைக்குக் கீழ்ப்பட்ட பாகங்கள்தாம் அசையும். சிறிது தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்கு யார் மிருதங்கம் வாசிக்கிருர் என்று

கூடக் கண்டுபிடிக்க முடியாது. கச்சேரி முழுதும் நாதப் பிரமம் தாண்டவமாடும். இத்துடன் அவர் பரம பக்த ராகையால் தாம் செய்து வந்த ஸ்திரவார (சனிக்கிழமை) பஜனைகளில் இரண்டு தம்புராக்களைச் சேர்த்து வைத்துச் சுருதி சுத்தமாய்ப் பாடிக்கொண்டே மிருதங்கம் வாசிப்பார். இதனால் காலம் சென்ற மகா வைத்தியநாதசிவன் அவர்கள், பட்டணம் சுப்பிரமணிய ஐயரவர்கள், தஞ்சைக் கிருஷ்ண பாகவதரவர்கள், திருக்கோடிக்காவல் கிருஷ்ணையரவர்கள், கும்பகோணம் சரப சாஸ்திரிகள், வீணை சேஷண்ணா அவர்கள் முதலியவர்களிடம் விசேட மதிப்பைப்பெற்று மிருதங்கத்தில் நந்திதேவர் என்று பெயர் வாங்கியிருந்தார். இப்போதும் மிருதங்கம் என்றால் நாராயணசாமி அப்பாவின் ஞாபகம் யாருக்கும் வராமல் இராது. அப்பேர்ப்பட்ட மகா வித்துவானாய் விளங்கிவந்து சுமார் (70) எழுபதாவது வயதில் அவர் காலம் சென்றார். அவர் மறைந்தாலும் அவருடைய புகழ் மறையாமல் இருந்து கொண்டிருக்கின்றது. அவருக்குப் புத்திர சம்பத்து மட்டும் இல்லாமல் போய்விட்டது வருந்தத்தக்கதே. அவரைப்பற்றி இன்னும் ஒரு சமாச்சாரம் சொல்ல வேண்டும். ஹைகோர்ட்டு ஜட்ஜ் மணி ஐயர் அவர்கள் சரப சாஸ்திரிகள் (புல்லாங்குழல்) திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர் (பிடில்) நாராயணசாமி அப்பா (மிருதங்கம்) இவர்கள் மூன்று பேர்களுக்கும் சம்மானம் பெரும் தொகையாகவும் ஒரேமாதிரியாகவும் அளித்திருக்கிறார்கள். அத்துடன் மறுதினம் நாராயணசாமி அப்பா, பஜனை சம்பிரதாயப்படி தம்புரா சுருதியுடன் பாடிக்கொண்டு மிருதங்கம்வாசிக்க, அதற்குப் பக்கவாத்தியங்களாகச் சரப சாஸ்திரிகள் அவர்களும், கிருஷ்ணையர் அவர்களும் வாசித்துப் பெருமைப் படுத்தினார்கள் என்றால் நாராயணசாமி அப்பா அவர்களின் யோக்கியதையும் குணாதிசயங்களும் எவ்வளவு நன்றாக இருக்குமென்பதை நான் சொல்லாமலே தெரிந்து கொள்ளலாம்.

---

## துக்காராம்

தஞ்சை துக்காராம் என்பவரது வாசிப்பானது பக்க வாத்தியத்திற்கு மிகவும் பொருத்தமாயிருக்கும். மகா வைத்தியநாத ஐயர், பட்டணம் சுப்பிரமணிய ஐயர், தோடி சுந்தர ராவ் முதலானவர்களுடைய கச்சேரிகளுக்கு வாசித்து வந்தவர். மீட்டு, கும்கி என்பவை இவர் கையில் பிரமாதமாக இருக்கும் என்று கேள்வி. நாராயணசாமி அப்பாவின் காலத்தில் இவரும் ஒருவர். தொழில் முறையாக வெளிச் சஞ்சாரத்தில் இவர் மிகப் புகழ்பெற்றவர்.

சிறு தொகை முதல் பெரிய தொகை வரையில் பெற்றுக் கொண்டு கச்சேரிகளை ஒன்றுகூட விட்டுவிடாமல் தொழில் நடத்திவந்தவர். கையில் மிருதங்கநாதம் கொஞ்சம் குறை வாகவே இருந்தபோதிலும் அவர் சளைக்காமல் வாசிப்பதி லும், மீட்டு, கும்கி, புரட்டல்கள் திருப்தியாகக் கொடுத்து வாசிப்பதிலும் மகா தீரர். இவரும் அந்தநாளில் கிருஷ்ண பாகவதர் கதை முதலிய பெரிய கதைகளுக்கும் வாசித்து வந்தார். இவர் சுமார் 40 வயதிற்குள்ளே காலமாகிவிட்ட தாகத் தெரிகிறது. இவர் காலமாகிச் சுமார் 45 வருடத் திற்கு மேல் இருக்கும்.

---

## சேதுராம ராவ்

தஞ்சாவூர் சேதுராம ராவ் என்பவர் ஒரு பெரிய மிருதங்க வித்துவான். இவர், கோயம்புத்தூர் இராக வையர், பாலக்காட்டுக்குச் சமீபமான நம்மாறை என்னும் ஊரிலிருந்த பரமேஸ்வர பாகவதர், முக்கெ என்னுங் கிரா மத்திலிருந்த கணபதி பாகவதர், நூர்ணி என்னும் ஊரி லிருந்த மகாதேவ பாகவதர் இவர்களுடைய கச்சேரிகளுக் கெல்லாம் வாசித்து மலையாள தேசத்தில் விசேட கியாதி வாய்ந்தவர். திருவனந்தபுரம் சமஸ்தானத்திலிருந்து இவ ருடைய அந்திய காலம் வரையில் சம்பளம் வந்துகொண் டிருந்தது. இவர் வாசிப்புக் கொஞ்சம் பெரும் அடியாக இருந்தபோதிலும் பாட்டுகளுக்கும் வாத்தியங்களுக்கும் பொருத்தமாகவே வாசிப்பார். ஆனால் தனி ஆவர்த்தனம் வாசிக்கும் சம்பிரதாயம் இவரிடத்தில் இல்லை. யாராவது கட்டாயப்படுத்தி வாசிக்கச் சொன்னபோதிலும் வாசிப்ப தில்லை. வாசிப்பில் மீட்டுச் சாதிகள் வாசிப்பதைவிடப் புரட்டல்களை அதிகமாக உபயோகப்படுத்துவார். பாட்டு முடிந்ததும் அதிதமாக மோறுக்களை எடுத்து மூன்றும் ஒரே தினுசாகக் கொடுப்பது இவருடைய வழக்கம். இத னால் தஞ்சாவூர் முதலான இடங்களில் இவர் ஒரு கணக் குடன் வாசிக்கிறார் என்ற பெயர் உண்டு. தஞ்சாவூரில், வட தேசத்திலிருந்து வரும் பாவாக்கள் செய்யும் கதை களுக்கு, கிருஷ்ணசாமி நாயக்கர் வீட்டில் அடிக்கடி இவர் வாசிப்பார். கதைகளுக்கும் மிகப் பொருத்தமாகவே வாசிப்பார். இவர் சுமார் 70 வயது வரை இருந்தார். இவர் காலமாய் 25 முதல் 30 வருடம் வரை இருக்கும். இவருக் குச் சந்ததிகள் இல்லை.

---

## தாசு சுவாமிகள்

இவருக்கு மடாதிபதி என்கிற ஒரு பட்டம் உண்டு. இவர் வாசிப்புநாராயணசாமி அப்பாவினுடைய வாசிப்புப் போலவே இருக்கும். கச்சேரிகளுக்கு வாசிப்பதைவிடக் கதைகளுக்கு மிக நன்ருக வாசிப்பார். அநேக கச்சேரி களுக்கும் வாசித்திருக்கிருர். இவருடைய குணம் கொஞ்சம் முரட்டுக்குணம் என்பார்கள். அதாவது இவருக்கு இஷ்ட மிருந்தால் அந்தக் காரியத்தைச் செய்வார். பிறர் சொல்லுவதற்காகச் செய்வது என்பது மிகவும் அருமை. இவருடைய சொந்த ஊர் தஞ்சாவூர். அதிகமாகக் கௌர வத்தை விரும்புபவர். ஆகையால் பணத்தை விசேஷமாக லட்சியம் செய்யமாட்டார். சுமார் ஒரு பர்லாங் இரண்டு பர்லாங் தூரமுள்ள இடங்களுக்கும் வண்டி வைத்துக் கொண்டுதான் போவார். கச்சேரிகளுக்கு மிகப்பொருத்த மாக வாசிப்பார். ஆனல் சில சமயம் பாட்டுகளுக்கு அதிக இடைஞ்சலாக வாசிப்பார். அது பாடகர்களுக்குச் சிரம மாய் இருக்குமாதலால் வித்துவான்கள் தாசு சுவாமிகள் மிருதங்கமென்ருல் கொஞ்சம் பயந்து இன்று நன்ருய் இருக்கவேண்டுமே என்று கவலைப்படுவதுண்டு. நல்ல குணம் வந்து வாசித்துவிட்டால் அபாரமாயிருக்கும். இதற்குத் திருஷ்டாந்தம்—ஒரு சமயம் இராமநாதபுரத்தில் அரண்மனையில் சீனிவாசையங்கார் கச்சேரிக்கு இவர் வாசிக்க நேர்ந்தபோது, மிகவும் திருப்தியாக வாசித்த தனல் ஸ்ரீமாந் பாண்டித்துரை அவர்கள் மிகவும் சந்தோ ஷப்பட்டுஇவருக்குச் சுமார் ஆயிரம் ரூபாய் பெறும்படி யான ஒரு ஜோடி கடுக்கனைக் காதில் அணிந்துகொள்ள வெகுமதியாகக் கொடுத்தார். அதைத் தவிரப் பணங் களும் கொடுத்திருக்கிருர். கொஞ்ச நாள் வரையில் இராம நாதபுரம் சமஸ்தான ஆதரவும் இருந்துவந்தது. ஆகை யால் பெரிய வித்துவக் கோஷ்டியில் இவரும் ஒருவர். இவர் எழுபத்தைந்து வயதுவரை இருந்திருக்கிருர். இவர் காலமாகிச் சுமார் 25 அல்லது 30 வருடத்திற்குள் இருக்கும்.

---

## மைலாட்டூர் கிருஷ்ண ஐயர்

என்னுடைய சிறிய தகப்பனரும் குருநாதருமாகிய மைலாட்டூர்க் கிருஷ்ணையர் அவர்கள் பாலக்காட்டுக்குச் சமீபமான மைலாட்டூர் என்னும் அக்கிரகாரத்திற் பிறந்த வர். அவருடைய குரு ஆலப்புழை அண்ணுத்துரை பாக வதர். அவர் அந்த காலத்தில் கியாதியுடன் விளங்கின வர். அவரிடம் சுமார் 3 வருடம் இவர் கற்றுக்கொண்டு, சோரனூர்க்குச் சமீபமுள்ள காஞ்சூர் மனைக்கல் என்னும்

ஊரில் உள்ள நீலகண்ட நம்பூதிரிப்பாட் அவர்களுடைய ஆதரவில் இரண்டு மூன்று வருடங்கள் இருந்துவந்தார். மேற்படி நம்பூதிரி அவர்களுக்குச் சங்கீதத்தில் நல்ல ஞானமும் மிருதங்கம் சுமாராக வாசிக்கும் ஞானமும் இருந்தன. மிகவும் தனவந்தராகையால் மலையாளத்திலிருக்கும் அநேக சங்கித வித்துவான்களை ஆதரித்து வந்ததுடன் அடிக்கடி தன் ஜாகையில் கச்சேரிகளை ஏற்படுத்திமைலாட்டூர்க் கிருஷ்ணையர் அவர்களை மிருதங்கம் வாசிக்கச்செய்து கொண்டும் வந்தார். பிறகு நாம் இவ்விடத்திலேயே வாசித்துக்கொண்டிருந்தால் தொழில் விருத்தியாகாதென்று தெரிந்துகொண்டு தஞ்சாவூருக்குப் புறப்பட்டு வந்தார். அப்பொழுது அவருக்குச் சுமார் 20 அல்லது 22 வயது இருக்கும். அந்தச் சமயம் தஞ்சையில் நாராயணசாமி அப்பா, துக்காராம், தாசு சுவாமிகள், சேதுராமராவ் முதலான பிரபல மிருதங்க வித்துவான்கள் இருந்தார்கள். சனிக்கிழமைதோறும் நடந்துவரும் நாராயணசாமி அப்பா அவர்கள் பஜனைக்குத் தவறாமல் போவார். இவருக்குச் சுயமாகவே நல்ல சங்கீத ஞானமும் லய ஞானமும் இருந்ததினால் நாராயணசாமி அப்பா செய்துவரும் பஜனைகளுக்குப் போய் அவருடைய வாசிப்பிலிருந்து அநேக விஷயங்களைத் தெரிந்துகொண்டு தானும் தனியாகச் சாதகங்களும் செய்து வாசிப்பை மிகவும் உயர்வாகச் செய்துகொண்டார். சுமார் ஆறு, ஏழு மாதங்களுக்குள்ளாக அப்பொழுது தஞ்சையிலிருந்த கியாதி பெற்ற கிருஷ்ண பாகவதர் அவர்கள் கதைச் செட்டுடன் இவர் சேரும்படியாக ஏற்பட்டுவிட்டது. சுமார் 5 வருடகாலம் மேற்படியார் கதைச் செட்டுடன் வாசித்துவந்தார். அந்தச் சமயம் கதை கேட்பவர்கள் எல்லோருமே கிருஷ்ண பாகவதருடைய யோக்கியதையையும் வாக்குச் சாதுரியத்தைதையும் புகழ்வதுடன் பின் பாட்டையும் மிருதங்கம் வாசிப்பையும் சிலாக்கியமாகச் சொல்லுவார்கள். அதாவது தேவகானமென்றே புகழ்வார்கள். தஞ்சைப் பஞ்சாபகேச பாகவதர், மருதப்பா பிள்ளை பின்பாட்டு, மைலாட்டூர் கிருஷ்ணையர் மிருதங்கம் இந்தச் செட்டுக்கு மேல் சேட்டே கிடையாது என்று சொல்லுபவர்களும் உண்டு. கதைக்கு வாசித்துக்கொண்டிருக்கும் இடையிலேயே கச்சேரிகளுக்கு வாசிக்கவும் கிருஷ்ணையர் அவர்களுக்குத் தருணம் வந்துகொண்டிருந்தது. அதாவது இராமநாதபுரம் சீனிவாச ஐயங்கார், பாலக்காடு அனந்தராம பாகவதர், B. A. வரதாச்சாரியார், டைகர் வரதாச்சாரியார், கோனேரிராஜபுரம் வைத்தியநாதையர், சஞ்சிவி ராயர், முத்தையா பாகவதர், வேதாந்த பாகவதர், வீணை சேஷண்ணா, திருக்கோடிகாவல் கிருஷ்ணையர், திருச்சி கோவிந்தசாமி பிள்ளை

இவர்களுடன் சேர்ந்து அநேக கச்சேரிகள் வாசிக்க நேர்ந்ததால் கதைச் செட்டிலிருந்து விலகிவிட்டார். சுமார் 30 வருட காலம் அநேக கச்சேரிகளுக்கு வாசித்துவந்தார். இவர் வாசிப்பிலுள்ள முக்கிய குணங்கள் நாத சுத்தம் (புரட்டல்கள் கூட) காலப்பிரமாண சுத்தம், பாட்டைப் போஷித்து வாசிப்பது, எந்தப் பல்லவிகளுக்கும் அநாயாசமாக வாசிப்பது முதலியனவாம். இன்னமும் மிக நாணயமாகவும் கௌரவமாகவும் தொழிலை நடத்தி வந்து நல்ல கியாதியுடனிருந்து அவருடைய 54வது வயதில் காலமானர். காலமாகிச் சுமார் 32 வருடம் இருக்கும்.

---

## அழகநம்பியா பிள்ளை.

இவர் சிறு வயதில் தஞ்சாவூரிலேயே இருந்தவர். சுவாமிநாத பிள்ளை என்பவருடைய சிஷ்யராகத் தெரிகிறது. இவர் பரதநாட்டியக் கச்சேரிகளுக்கு வாசிக்கும்படியாக முதலில் தயார் செய்துகொண்டு அநேக பரத நாட்டியக் கச்சேரிகளுக்கு மிகவும் பிரமாதமாக வாசித்து வந்திருக்கிறார். அதற்குப் பிறகு கும்பகோணம் வந்து திருப்பழனம் பஞ்சாபகேச பாகவதர் அவர்கள் கதைச் செட்டுடன் சுமார் 5 வருட காலம் வாசித்து வந்தார். கதையிலும் இவர் வாசிப்பானது அழகாகவும் மிக்கத் திறமையாகவும் இருக்கும். இதற்கு மத்தியில் அந்நாளில் இருந்த இராமநாதபுரம் சீனிவாச ஐயங்கார், B. A. வரதாச்சாரியார், கோனேரிராஜபுரம் வைத்தியநாதையர் முதலியோர் கச்சேரிகளுக்கும், இப்போது இருக்கிற பெரிய வித்துவான்கள் கச்சேரிகளுக்கும் அடிக்கடி வாசிக்கும்படியாகஏற்பட்டன. அதனல் கதைச்செட்டை விட்டுப் பிரிந்து தனியாகவே இருந்தார். ஏராளமான கச்சேரிகளில் வாசித்துக் கேட்கிற சனங்கள் எல்லோருக்கும் அபாரமான திருப்தியை உண்டுபண்ணி வந்தார். கையில் மீட்டு, கும்கி, புரட்டல்கள் முதலான எல்லா அம்சங்களும் அபாரமாகப் பேசும். பாட்டு, வாத்தியங்கள் இவைகளுக்கு ஒட்டி வாசிப்பதில் இவருக்கு நிகரில்லை என்று சொல்லும்படியாகவும் இவருடைய வாசிப்பு இருந்தது. மிருதங்கத்தில் இவருக்கு முந்தினவர்களிடம் இல்லாத ஒரு சொல்லு அதாவது "தகஜெனு" என்கிற சொல்லு இவர் கைக்கு அநாயாசமாகப் பேசிவந்தது. அதாவது இச்சொல்லை எல்லோரும் வாசித்தபோதிலும் இவர் கையிலிருந்து வரும்போது அதைக் கேட்பதில் ஒரு தனிப்பட்ட இன்பம்

இருந்து வந்தது. மிருதங்கத்தைப்பற்றிய நாதங்களை விவரிக்கும்போது, இவர் வாசிப்பில் தனியான ஒரு சுகம் கேட்பவர்களுக்கு இருந்துவந்தது என்பதை எல்லோரும் அறிவார்கள். இவர் சுமார் 62-வது வயதில் காலமானதாகத் தெரிகிறது. இப்பொழுது அவர் காலமாகிச் சுமார் 16 வருஷங்கள் இருக்கலாம்.

---

## தட்சிணாமூர்த்திப் பிள்ளை.

தட்சிணாமூர்த்திப் பிள்ளை என்பவர் புதுக்கோட்டைச் சமஸ்தானத்தில் சிறு வயதில்ஏதோ சிறிய வேலையில் இருந்தவர். இவருடைய சொந்த ஊர் புதுக்கோட்டையே அந்தச் சமஸ்தானத்தில் தசரா முதலிய விசேடங்களில் அநேக வித்துவான்களுடைய பாட்டுக்கச்சேரி முதலானவைகள் நடப்பது வழக்கம். இவர் சுயமாகத் தாள ஞானமும் உள்ளவரானபடியால், பல சங்கீதக் கச்சேரிகளுக்குப் பக்க வாத்தியங்கள் வாசிக்கும் விதத்தைக் கேட்டுத்தாமும் கடவாத்தியம் வாசிக்கத் தொடங்கிச் சில நாள் வாசித்துவந்தார். பிறகு அது பொருத்தமில்லை என்று தெரிந்து மான்பூண்டியா பிள்ளை அவர்களிடம் கஞ்சிரா கற்றுக்கொள்ளும்படி போய்ச்சேர்ந்து சிலநாள் குருகுலவாசம் செய்து பயிற்சி பெற்றமையால் கஞ்சிரா மிகவும் நன்ருக வாசித்து வந்தார். மிருதங்கமும் வாசிக்க வேண்டும் என்று அவருக்கு மிக்க ஆவலும் ஊக்கமும் இருந்து வந்தன. லய வாத்தியங்களில் ஒன்றில் பழக்கம் உள்ளவர்கள் மற்ருென்றையும் சௌகரியமாக வாசிக்க முடியுமாதலால் மிருதங்கத்தை அப்பியசித்து வந்தார். அந்நாளில் எந்த மிருதங்கவித்துவானும் அரி கதா காலட்சேபங்களுக்குச் சிலநாள் வாசித்த பிறகே கச்சேரிக்கு வாசிப்பது வழக்கத்திலிருந்தது. அதுபோல் இவரும் தஞ்சை வந்து நாராயணசாமி அப்பா அவர்கள் நடத்தி வந்த பஜனைகள் பலவற்றைக் கேட்டு அவருடைய வாசிப்பை மனதில் வாங்கிக் கொண்டு சாதகம் செய்து வந்ததுடன் திருப்பழனம் பஞ்சாபகேச பாகவதர் கதைகளில் சிலவற்றிற்கு வாசித்தும், மாங்குடி சிதம்பர பாகவதர் கதைச் செட்டுடன் சேர்ந்து இரண்டு வருடம் வாசித்தும் வந்தார். அதற்கு மத்தியில் அநேக கச்சேரிகளுக்கும் வாசிக்க நேர்ந்தமையால் கதைச் செட்டிலிருந்து பிரிந்து பிரமாதமான கியாதியுடன் மிருதங்கமும் கஞ்சிராவும் கச்சேரிகளுக்கு வாசித்து, சனங்களை மிகவும் மகிழ்ச் செய்தார், இவருடைய கஞ்சிரா வாசிப்பு இவர்

குருவின் வாசிப்பைவிடச் சிறந்தது என்று சொல்வதில் ஆட்சேபனை இல்லை. அதுவும் குருவின் அனுக்கிரகம், மிருதங்கத்தைப்பற்றிச் சொல்லுமளவில் அதிக நாள் வரையில் அவருக்குக் கையில் விரல்கள் அமையாமல் பெரும் அடியாகவே இருந்துவந்தது. ஆனால் அவர் புத்திமான் ஆகையினாலும் ஈசுவரபக்தி குருபக்தி உள்ளவராகையினாலும் ஊக்கத்துடன் ஞானவலுவை வைத்துச் சாதகம் பண்ணி மிருதங்க வாத்தியத்தினுடைய அமைப்பை நன்கு தெரிந்து இடந்தரை வலந்தரை பொருத்தமாகவும், அநேக நவீனச் சொற்களை அவரே மிருதங்கத்தில் புகுத்தி விட்டார் என்று சொல்லும்படியாகவும் மிக அழகாக வாசித்து வந்தார். சுமார் 15 வருடகாலம் அவர் பக்குவப்பட்டு மிருதங்கம் வாசித்தாரென்றே சொல்லலாம். அவர் நாளிலிருந்த கோனேரிராஜபுரம் வைத்தியநாதையர், சீனிவாசையங்கார், தற்போது காலஞ்சென்ற சஞ்சிவி ராயர், டைகர் வரதாச்சாரியார் முதலிய வித்துவான்களுக்கும் வாசித்து வந்ததுடன், காலம் சென்ற காரைக்குடி சுப்பராமையர், இப்பொழுது இருக்கிற சாம்பசிவ ஐயர் இவர்கள் ஜோடி வீணைக் கச்சேரிகளுக்கும் பொருத்தமாக வாசித்துவந்தார். காரணம் மேற்படி சகோதரர்கள் தாளத்தில் அதிக நிபுணர்கள். அவர்களைப்போல தாளத்தில் உட்புகுந்து சுரம் பாடுவதும் வாசிப்பதும் மற்றவர்களிடம் காண்பது அருமை என்று சொல்லலாம். ஆகையால் அதில் இவர் தம்முடைய சாமர்த்தியங்களைக் காட்டி வீணைக்குட்புகுந்து வாசித்தும் வந்தார். காலத்திற்குத் தகுந்தபடி கிளம்பும் சங்கீத வித்துவான்களையும் இவர் தன் வசப்படுத்தி அவர்களுக்கும் இவரே கச்சேரி ஏற்பாடுபண்ணி வாசித்தும் வந்தார். காரணம் எவ்வளவு அபரிமிதமாக வாசித்து வந்தபோதிலும் பாடகர் ஒருவரை வைத்துக்கொண்டு தானே வாசிக்கவேண்டும். அந்த லௌகீகமும் தெரிந்தவர். அவர் சுமார் 62-வது வயது வரை இருந்தார். காலமாகிச் சுமார் 17 வருடமிருக்கும். இவருடைய மகன் சாமிநாத பிள்ளை என்பவர் தம் தந்தையாரைப் போலவே மிருதங்கம் கெஞ்சிரா என்னும் இரண்டு வாத்தியங்களிலும் நல்ல திறமையுடையவராக இக்காலத்தில் இருக்கிறார்.

---

## மான்பூண்டியா பிள்ளை

மான்பூண்டியா பிள்ளை என்பவர் புதுக்கோட்டைச் சமஸ்தானத்தைச் சேர்ந்தவர். இவருடைய சிறு வயது அனுபவங்கள் எனக்குத் தெரியாதபோதிலும் பிறகு இவ

ருடைய யோக்கியதாம்சங்கள் நன்கு தெரியும். கஞ்சிரா என்கிற ஒரு சாதாரண வாத்தியத்தைச் சங்கீதக் கச்சேரி களில் மிருதங்கத்திற்கு அடுத்தபடியாகச் சேர்த்துப் பக்க வாத்தியமாக வாசிக்கும் நிலைமைக்குக் கொண்டு வந்தவர் இவரே யாவார். அவருடைய காலத்திற்கு முன் விசேஷமாகக் கஞ்சிரா வாத்தியம் பிரபலமடையாமல் சாதாரணமாகப் பஜனை முதலியவைகளுக்குச் சத்தப் படுத்தும் அளவில் இருந்தது. அவர் அந்த வாத்தி யத்தை உன்னத நிலைமைக்குக் கொண்டுவந்துவிட்டதைப் பற்றி அவருக்கு ஒரு தனியான கௌரவம் உண்டு. அந்த வாத்தியம் ஒற்றைக்கை வாத்தியமாக இருந்த போதிலும், அதில் அநேகச் சொற்களைக் கொடுத்தும், இடதுகை அனுசரிப்பினால் குமுக்காரம் பேசும்படி செய் தும், நாதசுகம் இல்லாத வாத்தியமானதால் இதற்கு வேறு தினுசான செய்கைகளைச் செய்து காட்டினால் ஒழிய சர்வசனங்களும் திருப்தி அடையமாட்டார்கள் என் பதை உணர்ந்து தாளத்தின் உட்புகுந்து அநேகவிதமான சொற்களையும் ததிங்கிணதோம் வகையறுக்களையும் சாதி விந்நியாசங்களையும் அபரிமிதமாக கொடுத்தும், வாசிக்கும் படியான ஏற்பாட்டைத் தமது திறமையால் செய்து காட் டினார். ஏறக்குறைய அவராலே லய சொற்களுக்கு, ததிங் கிண தோம்களும் சில விஷம மோறுக்களும், தாள ஞானி கள் கிரகித்துக் கொள்ளும்படியான அம்சங்களும் ஏற்பட் டன என்றே சொல்லலாம், அவர் பக்க வாத்தியத்திற்கு நல்ல ஞானம் உள்ள பாடகர்களாக இருந்தால் தான் சமா ளிக்கலாம் இல்லாவிடில் இரண்டு பேர்களுக்கும் சிரமம் ஏற்படும். ஆகையால் பெரிய வித்துவான்களாயிருந்தும் சில பேர்கள் அவர் கஞ்சிராவை விரும்பாமல் இருந்தது முண்டு. சமீபகாலத்தில் இறந்துபோன கோனேரிராஜபுரம் வைத்தியநாதய்யர் சிறுவயதில் சிலநாள் இவருடைய சகவாசத்திலிருந்து சில தாள நுட்பங்களை அறிந்து கொண்டவராகவும் சொல்லலாம். அதனாலேயே வைத்திய நாதையரவர்கள் கச்சேரிகளில், பல்லவி, சுரம் பாடுவதில் தாள நுட்ப வேலைகள் அதிகம் இருந்தன என்பது எல் லோருக்கும் தெரிந்த விஷயமே. இவருடைய பிரபல சிஷ் யர்களே புதுக்கோட்டைத் தட்சிணாமூர்த்திப் பிள்ளை, பழனி முத்தையா பிள்ளை என்பவர்கள். இன்னும் பல சிஷ்யர்களும் உண்டு. ஆகையால் பிரபல வித்துவான் களில் இவரும் ஒருவர். இவர் காலமாகி 38 வருடமிருக் கலாம். சுமார் 65-வது வயதில் காலமானதாக தெரிய வருகிறது.

## பக்கிரி

பக்கிரி என்னும் பெயருடைய ஒருவர் தஞ்சாவூரி லிருந்தார். அவருடைய வாசிப்பில் சொற்ப மீட்டுக் கைகளும் சொற்பமான புரட்டல்களும் தான் இருக்கும். ஆனாலும் அவைகளை அவர் அடிக்கடி கொடுத்து வாசிப் பதில் கொஞ்சம் கூடக் கேட்கிறவர்களுக்கு அதிருப்தி உண்டாகாது. ஆமோதிக்கும்படியாகவும் இருக்கும். அவருடைய கைவிரல்கள் அதிக நீளமாகவும் மெல்லிய தாகவும் இருக்கும். ஆகையால் இவர் கையிலிருந்து உண் டாகும் மிருதங்க நாதமானது மிகவும் இனிமையாக இருக் கும். மீட்டு, சாப்பு முதலான அம்சங்கள் மிகவும் சுத்த மாக இருக்கும். நல்ல சுருதி, சுர, லய, தாள நுட்பங்களை அறிந்த இசை ஞானமுள்ளவர் பாட்டுகளுக்கு பொருத்த மாகவும், தனி ஆவர்த்தனங்கள் வாசிப்பதற்கு வேண்டிய அம்சங்களை மிகக் கச்சிதப்படுத்தியும் வாசித்துச் சனங் களுக்கு மிகவும் மகிழ்ச்சியை உண்டு பண்ணுவார். இராம நாதபுரம் சீனிவாச ஐயங்கார், அனந்தராம பாகவதர், கோனேரி ராஜபுரம் வைத்தியநாதையர், சஞ்சீவி ராயர் முதலான எல்லாருடைய கச்சேரிகளுக்கும் வாசித்து வந் திருக்கிறார். இராமநாதபுரம் சீனிவாசயங்கார் அவர்களுக்கு இவரிடம் தனி மதிப்பு உண்டு. அத்துடன் திருப்பழனம் பஞ்சாபகேச பாகவதர், தஞ்சை நாகராச பாகவதர் கதை களுக்கும் அடிக்கடி வாசிப்பது உண்டு. இவருடன் சேர்ந்து கச்சேரி செய்யும் வித்துவான்களுக்கும் கேட்கும் சனங்களுக்கும் இவர் வாசிப்பு மிகத் திருப்திகரமாக இருந் தது குறிப்பிடத்தக்கது. இவர் காலமாகிச்சுமார் 43வருடம் இருக்கும். இவருக்கு ஒரு மகன் இருக்கிறார். அவர் தஞ்சை யில் மிருதங்கம் வாசித்துக் கொண்டு வருகிறார். மேற்படி பக்கிரி என்பவர் பரதநாட்டியத்தில்பிரமாதமாக வாசித்த நாளும் உண்டு.

---

## பழநி கிருஷ்ணையர்.

பழநி கிருஷ்ணையர் என்பவர் கடவாத்திய வித்து வான். பழனியைச் சேர்ந்த கலையம்புத்தூர் என்னும் அக் கிரகாரத்தில் இருந்தார். இவர் சிறுவயதிலேயே முருக னுடைய பக்தியில் ஈடுபட்டவர். சுயமாகவே தாளஞ் ஞானத்தையுடையவர் அத்துடன் நல்ல சங்கீத ஞான மும் உண்டு. இவருடைய மாமாவாகிய பத்மநாப பாக வதர் என்பவர் கொஞ்சம்பாடிக்கொண்டும் உபாயமாகக்

கடவாத்தியம் வாசித்துக்கொண்டும் இருந்தார் தன் மருமகனாகிய கிருஷ்ணையருக்குச் சங்கீதம் சொல்லிவைத்து வந்தார். ஆனால் அவருக்குக் கட்டைச் சாரீரமாகவும் அதிலும் பேச்சுக்களே இல்லாமலும் சாரீரமே இல்லை என்று சொல்லும்படியாக இருந்ததைக் கிருஷ்ணையரவர்களே தெரிந்துகொண்டு, பாட்டு நமக்குப் பிரயோசனப்படாது என்று மாமாவிடம் கடவாத்தியம் சொல்லிக் கொடுக்கும்படி கேட்டார். அவரும் ஆமோதித்து அவ்வாத்தியத்தின் வழிகளை மட்டும் சொல்லிக் கொடுத்தார். இவர் அதிலிருந்து தன்னுடைய ஞானவலுவைக் கொண்டும், முருகன் கிருபையால் சரீரபலத்தைக்கொண்டும் ஒய்ச்சல் ஒழிவு இல்லாமல் பிரமாதமாகச் சாதகம் செய்துவந்தார். அத்துடன் மிருதங்க வாத்தியத்தைப் போல் நாதம் இவ்வாத்தியத்தில் இல்லை என்பதையும், இந்த ஊமை வாத்தியத்தில் சர்வ சனங்களும் திருப்தி அடையவேண்டுமானால், லய சம்பந்தமாக அகட விகட வேலைகள் செய்து கையில் அபரிமிதமான பேச்சுகளும் இருப்பதாகக் காட்டவேண்டும் என்பதையும் உணர்ந்து மிகச் சிரமப் பட்டுச் சாதகம் செய்துவந்தார். இயல்பாகவே பழநி ஆண்டவரிடம் இவருக்கு மிக்கபக்தி உண்டு. ஆண்டவன் கிருபையால் அவர் பிடித்த ஊக்கத்தைச் சாதித்து வந்தார். அந்நாளிலிருந்த அரிகதா காலட்சேப சிங்கமாகிய கிருஷ்ண பாகவதர், அவருடைய சிஷ்யர் பஞ்சாபகேச பாகவதர் ஆகிய இவர்கள் இரண்டு பேர்களும் மேற்படியாரது கடவாத்தியத்தை ஆமோதித்தும், அநேக கச்சேரிகளுக்குச் சிபார்சுகள் செய்தும் இவரை முன்னுக்குக் கொண்டு வந்தார்கள் என்பதையும் இவ்விடத்தில் குறிப்பிட வேண்டியதாயிருக்கிறது. மேலும் பஞ்சாபகேச பாகவதர் பிடில் கச்சேரிகளுக்கு இவர் கடவாத்தியம் நன்றாக வாசிப்பதும் எல்லோருக்கும் தெரிந்தவிஷயமே. தஞ்சையில் மேற்படியார் தனி பிடில்கச்சேரிக்குக்கடவாத்தியம்கிருஷ்ணையரை அடிக்கடி சேர்த்துக்கொண்டு கச்சேரி செய்துவந்தார். எல்லோரும் மகிழும்படியாக இருந்தது. நாராயணசாமி அப்பாவின் சனிக்கிழமைப் பஜனைக்கு முதல் முதலில் இவரைப் பஞ்சாபகேச பாகவதர் அழைத்துக் கொண்டு போனார். அப்பா அவர்களுடைய மிருதங்கத்தைக் கிருஷ்ணையர் கேட்டுப் பிரமித்து இந்த நாதப் பிரமத்தைக் கேட்ட பிறகு நாம் என்ன வாசிப்பது என்று பயந்து போனார். பிறகு நாராயணசாமி அப்பா, கிருஷ்ணையரைக் கடவாத்தியம் வாசிக்கும்படியும் பஞ்சாபகேச பாகவதரை பிடில் தனியாகவாசிக்கவும் ஏற்படுத்தினார். இரண்டு பேரும் கச்சேரி செய்ததை நாராயணசாமி அப்பா கேட்டு ஆனந்தித்து கடவாத்தியத்தில் நாதம் கிடையாது, ஊமை

வாத்தியம், இதை லய கணிசத்துடனும் அபார வேலை களுடனும் சங்கீத ஞானத்துடனும் வாசிப்பது மிகவும் அருமை என்று புகழ்ந்து பேசினர். மேலே குறிப்பிட்டிருக்கிற சங்கீத வித்துவான்களுடைய கச்சேரிகளுக்கு மைலாட்டூர்க் கிருஷ்ணையர், அழகிய நம்பியா பிள்ளை, இவர்களுடன் கடம் கிருஷ்ணையரும் சேர்ந்து பல இடங்களில் கச்சேரிகள் நடத்திவந்ததைச் சனங்கள் கேட்டுச் சந்தோஷப் பட்டிருக்கிறார்கள். மேற்படி வாத்தியம் தயார் பண்ணும் விதத்தையும் கொஞ்சம் சொல்லுவோம்.

மானமதுரை பண்ணுருட்டி என்னும் இரண்டிடங்களுக்கும் போய் மண்ணுடன் சில சேர்மானங்களைச் சேர்த்து அரைத்து நூற்றுக்கணக்கான பானைகளை உண்டாக்கி சுட்டெடுக்கச் செய்வார். இப்படிச் செய்வதற்கு ஆகும் அதிகப்படியான செலவுகளைத் தாமே கொடுத்து விடுவார். அப்பானைகளில் அக்காலத்திருந்த பாடகர்களுடைய சாரீர இயல்புக் கேற்ற நாதமுள்ள பானைகளைத் தெரிந்தெடுத்துக் கொள்வார். இவ்வாறு தயாரித்த பானைகள் 50—60. எப்போதும் அவரிடத்தில் இருக்கும். இவரிடத்தில் இன்னும் ஒரு விசேஷம் என்னவென்றால் தானே பாடிக்கொண்டு கடம் வாசிப்பது, அதுவும் ஒருவர் பாட மற்றொருவர் வாசிப்பது போலவே இருக்கும். சிலசமயம் வித்துவான்கள் கச்சேரிகளிலும் கடைசிப் பாகத்தில் இவரை ஒரு திருப்புகழ் பாடி வாசிக்கும்படியாகச் சொல்வதுண்டு. இப்படி வாசித்து விட்டுத் தனி ஆவர்த்தனம் பிரமாதமாக வாசிப்பார். இந்தப் பிரமாதத்தைச் செட்டி நாட்டில் ஒரு செல்வர் தம்வீட்டுக் கச்சேரியில் கேட்டு அவருக்கு 100ரூபாய் பெறும்படியான ஒரு மோதிரத்தை இனமாக அளித்தார். இப்படியாக அநேக புகழுடன் இவர் இருந்து சுமார் 40 வயதிற்குள்ளாகவே காலமாகிவிட்டார். இவர் காலமாகி ஏறக்குறைய 43 வருடமிருக்கும்.

# அண்ணுமலைப் பல்கலைக் கழகத்து

# இசைத்தமிழ் வெளியீடுகள்.

இசையறிவுடையோர் யாவரும் எளிதிற் பயின்று கொள்ளத்தக்க முறையில் விளக்கமான சுர தாளக் குறிப்புக்கள் அமைந்தவை.

**குறிப்பிட்ட விலைகளில் 25% வீதம் கமிஷன் தள்ளிக் கொடுக்கப்படும்.**

---

தொகுதி 1—பரிசுபெற்ற பாடல்கள் 46+2=48.

*திருவாளர்கள்:* டி. இலக்குமண பிள்ளை B. A., கீழ்வேளூர் மீனுட்சிசுந்தரம் பிள்ளை, விசுவநாத சாஸ்திரியார், கிருஷ்ண மாச்சாரியார், பாபநாசம் சிவன் என்னும் இவர்கள் இயற்றிய கீர்த்தனங்களும், கா. சுப்பிரமணியபிள்ளை M. A., M. L., அவர்கள் எழுதிய ஆராய்ச்சி முகவுரையும் அடங்கியுள்ளன.

தொகுத்தவர்:— V. S. கோமதிசங்கர ஐயர். (கைவசமில்லை)

தொகுதி 2—கீதவர்ண முதலியன 104.

*திருவாளர்கள்;* டைகர் வரதாச்சாரியார், திருப்பாம்புரம் சாமிநாத பிள்ளை முதலிய இசைவல்லுநர் பதினொருவரால் இயற்றப்பட்ட சஞ்சாரி கீதம், இலக்கணகீதம், சுரசதி, சதிசுரம், பிரபந்தம், ஆதிதாளவர்ணம், அடதாள வர்ணம் என்பனவும், சுரவரிசை, இரட்டைச் சுரவரிசை, அலங்காரம் என்பனவும் அடங்கியுள்ளன. (இரண்டாம்பதிப்பு)

தொகுத்தவர்:— V. S. கோமதிசங்கர ஐயர். விலை ரூ. 4 0 0

தொகுதி 3—பாடல்கள் 75.

நீலகண்ட சிவன், திரு. டி. இலக்குமண பிள்ளை, B. A. கோபாலகிருஷ்ண பாரதியார், அச்சுததாசர், வேதநாயகம் பிள்ளை, அருணசலக் கவிராயர் என்னும் இவர்களியற்றிய கீர்த்தனங்கள் அடங்கியுள்ளன.

தொகுத்தவர்:— V. S. கோமதிசங்கர ஐயர். (கைவசமில்லை)

தொகுதி 4—பாடல்கள் 60.

முத்துத்தாண்டவர் இயற்றிய கீர்த்தனங்களும், திருப்பாம் புரம் திரு. டி. என். சாமிநாத பிள்ளை அவர்கள் அமைத்த சுர தாளக் குறிப்புக்களும் அடங்கியுள்ளன. (இரண்டாம் பதிப்பு)
**தொகுத்தவர்:- திரு. T. N. சிவசுப்பிரமணிய பிள்ளை. (அச்சில்)**

தொகுதி 5-ல் முதற்பகுதி—இசையியல்.

இஃது இசைக்கலையின் இலக்கண நுட்பங்களை விளக்கு வது. சங்கீத கலாநிதி க. பொன்னையாபிள்ளை அவர்களால் எளிய நடையில் தெளிவாக எழுதப்பெற்றது, 750 ரூ. பரிசுபெற்ற நூல். இசையாசிரியர்கள், மாணவர்கள் இசைப்பற்றுடை யார் யாவர்க்கும் பயன் தருவது. (இரண்டாம் பதிப்பு)
விலை ரூ. 1-8-0

தொகுதி 5-ல் இரண்டாம் பகுதி—தமிழர் இசைக்கருவிகள்.

புதுச்சேரி அரவிந்த ஆசிரமத்திலுள்ள திரு.பி.கோதண்ட ராமன் M. A., அவர்களால், பலநூற் கருத்துக்களைத் தழுவி எழுதப்பட்டது. பண்டைத் தமிழர்கள் பயன்படுத்திய தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி முதலியவற்றின் அமைப்புக்களையும், இக்காலத்து வழங்கும் இசைக்கருவிகளின் இயல்புகளையும் உருவப்படங்களுடன் விளக்கிக் காட்டுவது. எளிய உரைநடை நூல். (கைவசமில்லை)

தொகுதி 5-ல் மூன்றும் பகுதி—சுரமேளகலாநிதி.

இது வடமொழியில் இராமாமாத்தியர் என்பவரால் எழுதப் பட்ட சுரமேள கலாநிதியின் மொழிபெயர்ப்பு. மொழி பெயர்த் தவர், சிரோமணி திரு. என். எஸ். தேசிகன் அவர்கள்.
விலை ரூ. 1 0 0

தொகுதி 6—பாடல்கள் 89.

நந்தனர் சரித்திரம் இயற்றிய கோபாலகிருஷ்ண பாரதியா ரால் பாடப்பெற்ற தனிக் கீர்த்தனங்கள். ஷை பாரதியாரிடம் நேரிற்பயின்ற மாணவர் பரம்பரையிற் கிடைத்த பழைய இசை யமைப்புக்களுடன் கூடியவை. (இரண்டாம் பதிப்பு)
**தொகுத்தவர்:- V. S. கோமதிசங்கர ஐயர். விலை ரூ.**

தொகுதி 7—பாடல்கள் 75.

திரு. எம். பி. பெரியசாமித்தூரன் B. A., L. T., அவர்கள் இயற்றிய கீர்த்தனங்களும், திரு. என், சிவராமகிருஷ்ண பாக வதர் அவர்கள் வகுத்த இசையமைப்புக்களும் அடங்கியுள்ளன
**தொகுத்தவர்:- V. S. கோமதிசங்கர ஐயர். (கைவசமில்லை**

தொகுதி 8. தமிழிசைப் பாடல்கள் 50.

சீர்காழி அருணாசலக் கவிராயர் இயற்றிய இராமநாடகக் கீர்த்தனங்கள். இசையரங்குகளிற் பாடுதற்கு ஏற்றவை. பனங்காட்டூர் திரு. சிவராம பாகவதர் அவர்களாற் கிடைத்த பழைய இசையமைப்புக்களுடன் கூடியவை. ஒவ்வொரு பாட்டிற்கும் வரலாற்றுக்குறிப்புக்கள் எழுதப்பட்டுள்ளன.

**தொகுத்தவர்:- V. S. கோமதிசங்கர ஐயர். விலை ரூ. 3 0 0**

தொகுதி 9—பாடல்கள் 54.

திருப்பாம்புரம் திரு. டி. என். சாமிநாதப்பிள்ளையவர்களால் இசை வகுக்கப்பட்ட தில்லைவிடங்கன் மாரிமுத்தாப் பிள்ளை பாடல்கள் 25-ம், செவற்குளம் கந்தசாமிப் புலவர் பாடல்கள் 13-ம், சுரசதி 4-ம், நகரம் முத்துவீரப்பக் கவிராயர் பாடல்கள் 12-ம் அடங்கியுள்ளன. விலை ரூ. 3 0 0

தொகுதி 10—பாடல்கள் 66.

நகரம் முத்துசாமி கவிராயர் அவர்கள் இயற்றிய கீர்த்தனங்கள் 35-ம், பதங்கள் 31-ம் அடங்கியுள்ளன. நகரம் முத்துவீரப்பக் கவிராயர் பாடிக்காட்டிய முறையைத் தழுவிச் சுரதாளக் குறிப்புக்கள் எழுதப்பட்டவை.

**தொகுத்தவர்:- T. N. சிவசுப்பிரமணியபிள்ளை. விலை ரூ. 3 0 0**

தொகுதி 11—பாடல்கள் 75.

திரு. சுத்தானந்த பாரதியாரவர்களால் இயற்றப் பெற்றவை. திருவாளர்கள்: டைகர் வரதாச்சாரியார், சங்கீதகலாநிதி க. பொன்னையா பிள்ளை, இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர் முதலிய இசை வல்லுநர்களால் இசையமைப்புக்கள் வகுக்கப்பெற்றவை.

**தொகுத்தவர்:- V. S. கோமதிசங்கர ஐயர். விலை ரூ. 3 0 0**

**தொகுதி 12-ல் முதற்பகுதி மிருதங்க பாடப் புத்தகம்.**

மிருதங்க ஆசிரியர் மைலாட்டூர் திரு. வி. சாமி ஐயரவர்களால் எழுதப்பெற்றது. முற்காலத்து மிருதங்க வித்துவான்கள் வாசித்த முறைகளையும், இக்காலத்தார் வாசிக்கும் முறைகளையும் தழுவியிருப்பது. மிருதங்கம் பயில்வோர் தெரிய வேண்டிய அளவில் இசையிலக்கணங்களும் குறிக்கப் பெற்றுள்ளன. மாணவர்க்கு மிகவும் பயன்படுவது. (இரண்டாம் பதிப்பு)

**தொகுத்தவர்:- V. S. கோமதிசங்கர ஐயர். விலை ரூ.**

**தொகுதி 12-ல் இரண்டாம் பகுதி.**
**மத்தளங்கற்கும் முறையும் அதன் சிறப்புவகையும்.**

ஆக்கியோர்:— திரு. சி. கு. நாராயணசாமி முதலியார் அவர்கள். விலை ரூ. 1 6 0

தொகுதி 13—பாடல்கள் 75.

தருமையாதீன வித்துவான் தேவகோட்டை பாலகவி வயி நாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியாரவர்களால் இயற்றப் பெற்றுத் திருப்பாம்புரம் திரு. டி. என். சாமிநாத பிள்ளை அவர்களால் இசையமைக்கப் பெற்றவை. விலை ரூ. 3 0 0

தொகுதி 14—மாணிக்கப்பாட்டு. பாடல்கள் 152.
(இசை வகுக்கப்பெற்றவை 111.
இசை வகுக்கப்பெறாத விருத்தப்பாக்கள் 41)

யோகி திரு. சுத்தானந்த பாரதியார் அவர்களால் இயற்றப் பெற்று, வீணை ஆசிரியர் திரு. வி. எஸ். கோமதிசங்கர ஐயரவர் களால் இசை வகுக்கப்பெற்றவை. (கைவசமில்லை)

தொகுதி 15—பாடல்கள் 75.

திரு. எம். பி. பெரியசாமித்தூரன் B. A., L. T., அவர்கள் இயற்றிய கீர்த்தனங்களும், திரு. என். சிவராமகிருஷ்ண பாகவதர் அவர்கள் வகுத்த இசையமைப்புக்களும் அடங்கியுள்ளன.

**தொகுத்தவர்:—** V. S. **கோமதிசங்கர ஐயர்.** **விலை ரூ. 3 0 0**

தொகுதி 16—பாடல்கள் 65.

வையைச்சேரி இராமசாமிசிவன் அவர்களால் இயற்றப் பெற்ற கந்தபுராணச் சுருக்கக் கீர்த்தனை 40-ம், மாணிக்கவாசக சுவாமிகளின் சரித்திரக் கீர்த்தனை 25-ம் அடங்கியுள்ளன. காளி தாஸ் திரு. என். நீலகண்ட ஐயரவர்களால் இசையமைக்கப் பெற்றவை. ஒவ்வொரு பாட்டிற்கும் வரலாற்றுக் குறிப்புக்கள் எழுதப்பட்டுள்ளன.

**தொகுத்தவர்:—** V. S. **கோமதிசங்கர ஐயர்.** **விலை ரூ. 3 0 0**

தொகுதி 17—பாடல்கள் 50.

கவிகுஞ்சர பாரதியார் முதலிய பதின்மர் பாடல்கள். இசை அமைத்தவர்; இசை அரசு. திரு. எம். எம். தண்டபாணி தேசிகர் அவர்கள்.

**தொகுத்தவர்:—** T. N. **சிவசுப்பிரமணியபிள்ளை.** **விலை ரூ. 3 0 0**

தொகுதி 18—ராஜா அண்ணாமலை தமிழிசைக் கருவூலம்.

இசை ஆசிரியர்: சங்கீத கலாநிதி க. பொன்னையாபிள்ளை அவர்கள் ஆக்கியது. சுரதாளக் குறிப்பு எழுதியவர்; திரு. வித்துவான் க. பொ. சிவானந்தம் பிள்ளை அவர்கள்.

விலை ரூ. 4 0 0

தொகுதி 19—திருப்புகழ் சுரதாளக் குறிப்புடன் 101.

காஞ்சீபுரம் நாயனப் பிள்ளை அவர்களும், இசை மன்னர் சுப்பிரமணியபிள்ளை அவர்களும் பாடிய முறையைத் தழுவியது சுரதாளக் குறிப்பு: திரு. ப. வைத்திலிங்கம் பிள்ளை அவர்கள்.

விலை ரூ. 3 0 0

தொகுதி 20—பரதசங்கிரகம்: அறம்வளர்த்தான் ஆக்கியது.

பரத நாட்டியம் பயின்றவர்கள் கையாண்டு வந்த பழைய ஏட்டுச் சுவடிகளிலிருந்து எடுத்து ஆராய்ந்து விளக்கக் குறிப்புடன் வெளியிடப்பட்டிருக்கிறது; நாட்டியத்திற்குரிய பாவ ராக தாளங்களைப் பற்றிய செய்திகளைத் தொகுத்துக் கூறுவது, இசை பயில்வோரும், பரதநாட்டியம் பயில்வோரும் தெரிந்துக் கொள்ளவேண்டிய செய்திகள் பல இதன் கண் கூறப்பட்டுள்ளன. தாள மாத்திரைக்குரிய குறியீடுகள் ஏட்டிலுள்ள படியே இதன் கண் அச்சிடப்பட்டுள்ளன. விலை ரூ. 4 0 0

பதிப்பாசிரியர்: வித்துவான் திரு. க. வெள்ளைவாரணனர் அவர்கள்.

தொகுதி 21.

நடராஜசுந்தரம் பிள்ளை அவர்கள் கீதவர்ண கீர்த்தனங்கள் அடங்கியவை. (அச்சில்)

தொகுப்பவர் - ஆசிரியர்: ப. சுந்தரேசன் அவர்கள்.

---

கிடைக்குமிடங்கள்:—

1. ரிஜிஸ்ட்ரார், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்.
2. தென் இந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 2140 பிராட்வே, சென்னை.
3. Higginbothams and Swadesamitran, Book Stalls.